உ

# சேரர் தாயமுறை.

ஏ. பி. நாகராஜன்.

ச. சோமசுந்தரபாரதி M. A., B. L.,
அட்வோகேட், ஹைகோர்ட், சென்னை.
தமிழ்ப்பேராசிரியர், அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,
அண்ணாமலைநகர்.

இதன் விலை அணா எட்டு.] [உரிமைகள்ஆக்கியோற்கே.

1935

# பொருளடக்க விவரம்.

# பாயிரம்.

பல ஆண்டுகளுக்குமுன் சேரர்தலைநகரான வஞ்சிபற்றிய ஆராய்ச்சிக்காக முன் இடைவிட்டுப்படித்துவைத்த பதிற்றுப்பத்தை மீண்டும் முற்றும் ஒருமுகமாகத் தொடர்ந்து உற்றுநோக்கநேர்ந்தது. அப்போது அந்நூலுட் செய்யுட்களுக்கும் பதிகப்பாட்டுக்களுக்கும் பாட்டுடைச்சேரரைப்பற்றிய தொடரமைப்பிற் சில மாறுபாடுண்மை புலப்பட்டது. பதிகங்களிலெல்லாம் ஒருபடியும், நூலின் பாட்டுலெல்லாம் வேறுவிதமும் குடிமரபுக்குறிப்புக்களைச் சுட்டுந்தொடர்கள் அமைந்துநிற்பது என் கவனத்தைக் கவர்ந்தது. எனினும், அப்போதுசெய்த சேரரின் ஊராராய்ச்சியை முடித்துப் பின் இச்செய்தியை ஆய்தல்நலமெனநினைத்து அதனைக்குறித்துவைத்தேன். பிறகு வஞ்சிபற்றிய என் ஆராய்ச்சியை முடித்துச் "சேரர்பேரூர்" என்ற கட்டுரையை எழுதி, என்னை அதுசெய்யத்தூண்டிய பெருந்தகையார் கற்பவை கசடறக்கற்றுக் கற்றதனாலாயபயன் காட்டுமாபோலக் கற்றபடி நிற்றலை மேற்கொண்டொழுகிய தமிழ்வாணரான தஞ்சை வக்கீல் ராவ்பகதூர் ஸ்ரீநிவாசப்பிள்ளையவர்களுக்கு அனுப்பினேன். அதன் பிறகு, தனியே ஆராயக் குறித்துவைத்த சிலசொற்றொடரின் கருத்தறியவிரும்பி மறுபடியும் பதிற்றுப்பத்தையும், சிலப்பதிகாரம், புறப்பாட்டுக்களில் சேரரைப்பற்றிய பகுதிகளையும் ஊன்றிப்படித்தேன். அப்போது, தமிழிலக்கியமுழுதும் தந்தைக்கு மகன்முறைசுட்டுமிடந்தோறும் இன்னான்சேய் இன்னான் என்ற வாய்பாடே எங்கும் வரும் பொதுவியல்புக்கு மாறாகப் பதிற்றுப்பத்துப் பதிகங்கள்மட்டும் வேறோர் தனிமுறையாளக் காரணம்வேண்டுமெனக் கண்டேன். இப்பதிகங்களில் யாண்டும் முன்னைய சேரர்பெயர்க்கெல்லாம் தவிராமல் "குவ்வுருபுகொடுத்துப் பிரித்து முதலில் நிறுத்தி, அதன்பின் அவனுக்கு இன்னான்தேவி யீன்றமகன், பாட்டுடைச்சேரன்" எனத் தெரித்துப்போகும் தனிப் புதுமுறை என்னை ஊன்றிச் சிந்திக்கச் செய்தது. அச்சிந்தனையும் அதுபற்றித் தொடர்ந்த ஆராய்ச்சியும் பண்டைச்சேரர் தாய்வழித்தாயத்தார் என்பதை எனக்குத் தெளிவித்த, அதன் உண்மையுணரலானேன்.

பிறகு வழக்கம்போல் நான் கண்ட உண்மையைப் புலத்துறை போகிய என் நண்பர் சிலருக்குச் சல்லாபப்பொருளாகச் சொல்ல நேர்ந்தது. அவர்கள் அக்கருத்தை வெளியிடுமாறு என்னைத் தூண்டி வந்தனர். மதுரைத்தமிழ்ச்சங்கநிருவாகம் திறமையுடன் நடத்துப வரும் தமிழறிவாளரைத் தலைக்கூட்டி அவருக்கு இயைந்த முறை வேளாண்மைசெய்து மகிழும் தலைநின்ற நீதிவாதியுமான திரு. T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்களிடம் இதை ஒருநாள் நான் பேசநேர்ந்தது. தமிழாராய்ச்சிகளினும் தன் நண்பரிடத்தும் அவர்களுக்குள்ள பேராதரத்தால், உடனே இதை விளக்கி ஒருகட்டுரையாக வெளியிட வேண்டுமென என்னை வற்புறுத்தி ஊக்கினார்கள். அப்பணி மறுக்க அஞ்சி, ஊர்தோறும் உழன்று உழைக்கும் என் வக்கீல் உத்தியோக நெருக்கடியினிடைக் கிடைத்த சிறுநேரத்தை மீண்டும் இவ்வாராய்ச்சிக்கு உபயோகித்து ஆழ்ந்து ஆராய்ந்து கண்ட என் முடிவுகளை ஆங்கிலத்திற் சிறு சஞ்சிகையாக 1929-ஆம் வருஷம் வெளியிட்டேன். அப்போது அதைத் தமிழ்ப்படுத்தித்தரும்படி நண்பர்சிலர் வேண்டித் தூண்ட, நானும் என் அவகாசக்குறைவில்இயன்றவரை ஒரு கட்டுரை தமிழில் எழுதிக்கொடுத்தேன்; அது தமிழ்ச்சங்கவெளியீடான செந்தமிழில் (27-ஆம் தொகுதியின் 4-ஆம் பகுதியில்) பிரசுரிக்கப் பெற்றது.

பிறகு அதைப்படித்த பண்டிதர் திரு. மு. இராகவையங்காரவர்கள் என்முடிவையும், நான்கொண்ட பதிற்றுப்பத்துப் பதிகத்தொடர்ப் பொருளையும் மறுத்துச் "செந்தமிழில்" (27-ஆம் தொகுதியின் 10-ஆம் பகுதியில்) ஒரு கண்டனமெழுதி வெளியிட்டார்கள். அதைப் படித்த பல நண்பர் அதற்கு மறுப்பெழுத என்னைத் தூண்டினர். உண்மைகாணமுயல்வதே என்கருத்தாகையால், பண்டிதர்களோடு சொற்போர்தொடர விருப்பமின்மையை விளக்கி, எங்களின் இரு கட்டுரைகளையும் முறையே படிப்பவருக்கு உண்மை தானே எளிதில் வெளிப்படுமென வாளாவிருந்தேன். எனினும் என் மருகர் மதுரை அட்வோகேட் L. கிருஷ்ணசாமிப்பிள்ளையவர்கள் என் விருப்பமறிந்தும் அமையாது பண்டிதரவர்களின் கண்டனவுரைக்குத் தாம் ஓர் விளக்க மறுப்பெழுதிச் செந்தமிழிலேயே (28-ஆம் தொகுதியின் 7-ஆம் பகுதியில்) வெளியிட்டார்கள். அத்துடன் அவ்வாதம் நின்றது.

பதிற்றுப்பத்துப்பதிகத்தொடர்கள் தாய்வழிகுறிப்பதென முதலிற் கண்டவன் நானல்லன்; முன்னமே இக்குறிப்புணர்ந்து ஆங்கிலத்தில் தாமெழுதிய "தமிழ்வரலாற்"றில் இதைக் காலஞ்சென்ற திரு. M. ஸ்ரீநிவாசையங்காரவர்கள் சுட்டியுள்ளார்களென, பண்டிதர் திரு. மு. இராகவையங்காரவர்கள் என் கட்டுரைக்கெழுதிய கண்டன உரையால் அறிந்து மகிழ்ந்தேன். பிறகு அக்குறிப்பையும் அவர்கள் ஆங்கிலப்புத்தகத்திற் படித்துப்பார்த்தேன். பதிகத்தொடர்களின் முதலிற் குறிக்கும் சேரமன்னருக்கு, பாட்டுடைச்சேரர் புதல்வரலர்; இடைத்தொடர்சுட்டும் இருமுதுகுரவருக்கும் புதல்வராய்ச் சேரருக்கு வழித்தோன்றலாம் மருகரேயாவரென முதலிற்கண்ட பெருமை ஸ்ரீநிவாசையங்காரவர்களதே எனத் தெளிந்தேன். தேவி-வேண்மாள் என்ற சொற்கள் மனைவியரையே குறிக்குமென தெளிந்த அவர்கள், "மகள்" என்ற சொல் சங்கநூலில் மனைவிப் பொருளில்வருமென அறியாமையால் சிறிது மறுகி, "சேரலாதற்குச் சோழன்மகள் ஈன்றமைந்தன்" என்ற சிலப்பதிகாரத்தொடரில் வரும் "மகள்" என்பது "மகன்" என்றிருக்கவேண்டுமெனவும், அது சுவடிபெயர்த்தெழுதுவோரால் "மகள்" எனப் பிழைபட எழுதப்பட்ட தவறான பாடபேதமெனவும் கருதினார்கள். "மகள்" என்பதற்குச் சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய சங்கநூல்களிலேயே "மனைவி"ப் பொருட்பிரயோகம் உண்மையை அவர்கள் அறிந்திருந்தால் அவர்கள்கண்ட பதிகப்பொருள்துணிவை இன்னும் வலியுறுத்தி விளக்கியிருப்பார்கள். அப்போது என் கட்டுரையே வேண்டப்படாது. அவர்கள் ஆங்கிலத்தில் வெளியிட்டதை முன் அறிந்திருந்தால் பிறிதுபொருளாராய்ச்சியிடையே இப்பதிகத்தொடர்கள் சுட்டிய குறிப்பைக்கொண்டு நான் செய்த ஆராய்ச்சிக்கு அவசியமே இருந்திராது

இனி, சமீபத்தில் மதுரைத்தமிழ்ச்சங்கத்தார் தங்கள் சங்கப் பண்டிதபரீக்ஷைக்கு இக்கட்டுரையைப் பாடமாக்கியதால், சில மாணவர் இக் கட்டுரைப்பிரதி வேண்டிக் கேட்கலாயினர். முன் செந்தமிழில் விரைந்தெழுதி வெளிவந்த என்கட்டுரையை இன்றியமையாச் சில சிறு திருத்தங்களுடன் இப்போது சஞ்சிகை யுருவில் தருதற்குரிய காரணம், மாணவரும் தமிழன்பர்சிலரும்

இதைப் படிக்கவிரும்பிப் பிரதிகள்வேண்டியதொன்றேயாகும். இதைப் படிப்பவர் இன்னும் விரிந்த ஆராய்ச்சிகளிலிறங்கி மெய்ப் பொருள்காண முயலுதற்கு இஃது உதவுமாயின், அதுவே நான் விரும்பும் கைம்மாறாகும்.

என் கட்டுரையைப் படித்து மதிப்புரைகள் உதவிய புலமைப் பெருந்தகையினர்க்கு என் நன்றி என்றும் உரியதாகும். இவ் வாராய்ச்சியுரையை மதித்துப் பரீக்ஷாபாடமாக்கிய மதுரைத்தமிழ்ச் சங்கத்தார் அன்பைப் பாராட்டுதலன்றிப் பிறிது நான்செய்தற்கில்லை. இதனை அச்சிட்டு வெளிவரச்செய்வதில் அனைத்துதவியும் விரும்பிச் செய்த என் நண்பர் மதுரைச்சங்க நூற்பரிசோதகரும், செந்தமிழ்த் துணைப்பதிப்பாசிரியருமான திரு. இராமாநுஜையங்காரவர்களின் உதவி மறக்கொணாது.

என்னைப் பல ஆராய்ச்சிகளிலும் ஊக்கி என்கட்டுரைகளைப் பாராட்டி வெளியிடப்பண்ணிவரும் செழுந்தகைமைத் தமிழ்வாணரெல்லார்க்கும் இக்கட்டுரையை உரிமைசெய்து உவக்கின்றேன்.

அண்ணாமலைநகரம்,
பவஆ மாசிமீ 14உ
25—2—1935.

ச. சோமசுந்தரபாரதி,
அட்வோகேட், தற்போது
தமிழ்ப்பேராசிரியர்,
சர்வகலாசாலைத்தமிழ்ப்பகுதித்தலைவர்.

# மதிப்புரைகள்.

க

சென்னைச் சட்டசபைச் செக்ரட்டரி திருவாளர் திவான்பகதூர்

**R. V. கிருஷ்ண ஐயரவர்கள் B. A., M. L.,**

எழுதியது.

(ஆங்கிலக்கடித மொழிபெயர்ப்பு.)

அன்புமிக்க பாரதியாரே!

சேர அரசர் தாயமுறையைப்பற்றிய தங்கள் மிக இனிய கட்டுரையை முழுவதும் படித்துப்பார்த்தேன். சேர அரசருள் மருமக்கட்டாயமுறை யுண்மையைச் சங்கநூல்கள் ஆதரிப்பன என்றே யான் எஞ்ஞான்றும் எண்ணினேன். தங்கள்கட்டுரையில் 5—ஆம் பக்கத்து 4-ஆவதுபிரிவில் தங்களாலும் காட்டப்படும் சொற்றொடரைத் திரு. எம். ஸ்ரீநிவாஸ ஐயங்கார் தம் 'தமிழ் ஆராய்ச்சிகள்' என்ற நூலுள் 273-ஆம்பக்கத்தில் மணக்கிள்ளியை நெடுஞ்சேரலின் உடன்பிறந்தாட்குக் கணவனாகவேகொண்டு விளக்கியுள்ளார். திரு. பி. டி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் தம் 'தமிழ்ச்சரிதம்' என்ற நூலுள் 512—ஆம் பக்கத்தில் இக்கருத்தொடு மாறுபடக்கூறினரெனினும், அவர்கூற்று வலியற்றதென நான் கருதலானேன். சேரவரசர்வழியில் மருமக்கட்டாயத்தை ஆதரிக்கச் சங்கநூல்களில் இவ்வளவு பொதி நிதிபோன்றசெய்திகளிருப்பதை நான் முன் அறியேன். இவ்வெல்லாச் சான்றுகளையும் திரட்டித் தாங்கள் ஒரு கட்டுரையாக வெளியிட்டது தமிழகத்திற்கு ஒரு பெரும்பணி இயற்றினதாகும். மருமக்கட்டாயமுறையானது மக்கட்டாயக்குடிகளின்மேல் புதிதாகச் சுமத்தப்பட்டதென்னும் கொள்கை அதனளவில் முதன்முகத்தே நிலையுறுவதன்றும். மக்களின் முற்போக்குமுறையில் தந்தைவழிக்குடியினின்றும் தாய்வழித்தாயநிலை ஏற்படுவது எஞ்ஞான்றும் இல்லையாகும். தென்னாட்டில்வந்தேறிய ஆரியர் (தந்தைவழி) நாகரிகம் இப் பழைய தாய்வழித் திராவிடநாகரிகமுறையை மேலைக்கடற்புறத்தே ஒதுக்கியதென்பதும், அக் குடகடலடைகரைக்கேரளநாட்டி.

னின்றும் இப்பழைய தாயமுறையை ஒழித்துவிட ஆரியநாகரிகத் திற்கு மாகாதுபோயிற்றென்பதும் இயல்பாகக்கூடியதாம். ஆரியர் நாகரிகம் தந்தைவழித் தாயத்தின்மேல் நிலைபெற்றது. இன்னும் பின்னுளில் இம் மருமக்கட்டாயமுறை எவ்வளவில் தமிழர் பழ இய லொழுக்காம் என்பதையும் தாங்கள் ஆராய்வீர்கள் என்றும், அதனை யும் ஆராய்ந்து நாகரிக உற்பத்திவளர்ச்சி விசாரத்திற்கு விரும்பத் தரும் நல்லுதவியாற்றுவீர்கள் என்றும் நான் நம்புகின்றேன். ...

மிக்க அன்புபாராட்டுடன்,

உண்மையில்

தங்களவன்,

செயிண்ட் ஜார்ஜ்கோட்டை
16—1—1935.

(ஆங்கிலத்தில் ஒப்பம்.) **ஆர். வி. கிருஷ்ணன்.**

## உ

மதராஸ் கார்ப்பொரேஷன் வித்யாஇலாகா பரிசோதகர் திருவாளர்
**S. சச்சிதாநந்தம்பிள்ளையவர்கள்** B. A., L. T.,
எழுதியது.

(ஆங்கிலக்கடித மொழிபெயர்ப்பு.)

தமிழ்ப்பேராசிரியர் திரு. S. S. பாரதியாரவர்களின் "சேர நாட்டுத் தாயமுறை" என்ற தனிக்கட்டுரையை மிக்க ஆர்வத்துடன் படித்தேன். "தசரதன்குறையும் கைகேயிநிறையும்" என்ற ஆராய்ச்சி யுரையை முன் திறம்பெற ஆக்கியோராகிய அப்பேராசிரியரவர்கள், இக் கட்டுரையில் பண்டைத் தமிழக வரலாறுகளை விசாரிப்பார் பல ருள்ளத்தே தோன்றிய சங்ககாலப் பெருஞ்சேரர் வழிமுறைபற்றிய மயக்கங்களையும் தவறான சில கருத்துக்களையும் தெளியவைத்து விளக்கியுள்ளார்கள். பண்டைச் சேரகுல அரசர்கள் இன்று மலையாள நாட்டில் வழக்கிலுள்ள மருமக்கட்டாயமுறையையே மேற்கொண் டிருந்தனரென்று மறுக்கவொண்ணுவாறு இவர்கள் நிறுவியமுடிபு

தமிழகவரலாற்றுத்துறையி லுழைப்போர்பலர்க்குப் புதிதாக வெளிப்படுத்தப்பட்ட உண்மையாகும். பேராசிரியர் பாரதியா ரவர்கள் இப்புத்தகத்தே தமது ஆழ்ந்த தமிழிலக்கிய ஆராய்ச்சி யையும், சட்டஞானத்தையும், தம் வளமிக்க நுண்மாண்நுழைபுலப் பேற்றினையும் இவ்வாராய்ச்சியிற் புகுத்திப் பயன்படுத்தமையால், இது புகழ்சான்ற பழஞ்சேரர்வரலாற்றில் நமக்குள்ள குறைபாட்டினை நிரப்பப் பேருபகாரமாயிற்று. நூற்சான்றுகளை வடித்தெடுத்துச் சீர்தூக்கி ஆயும் அவர்கள்திறம் மிக வியக்கத்தக்கதாம்.

புலமைமிக்க இந்நூலாசிரியர் தாம் வழக்கறிஞரா யிருந்தஞான்று தமது இன்பக்காலப்போக்காய்த் தமிழ்ச்சுவைதுய்க்கும் இடையே இத் தனியாராய்ச்சிக்கட்டுரை எழுதினரென்பது குறித்து வியக்கத் தக்கது. அண்ணாமலைநகர்க்கண் நிறுவப்பெற்ற தமிழ்ப்பல்கலைக் கழகம் தமிழ்ப்பகுதித்தலைவராக இவர்களை நியமித்து இவர்கள் முழுநேர விழுப்பணியைத் தனதாகப்பெற்றது தமிழகத்துக்குப் பெரும்பேறாகும். இதுபோன்ற திறஞ்சான்ற நுண்பொருணூல் இன்னும் பல உபகாரநிதியாக இவர்கள் தருவார்களென எதிர் பார்ப்பவன் யானொருவனல்லன்; என்போல்வார் பலருள்ளார்.

(ஆங்கிலத்தில் ஒப்பம்.) **S. சச்சிதாநந்தம்பிள்ளை,**

சென்னை
12—2—35.

சபாபதிநிலையம், லாயிட்ஸ்ரோடு,
இராயப்பேட்டை P. O.

II.

மதுரைத் தமிழ்ச்சங்கக்கலாசாலைத் தலைமையாசிரியர் பிரும்மஸ்ரீ
## திரு. நாராயணையங்காரவர்கள்
எழுதியது.

சேரர்தாயமுறை என்னும் இவ்வாராய்ச்சியுரையானது நுண் மாண் நுழைபுலச்செல்வரான திருவாளர் எஸ். சோமசுந்தரபாரதியார் எம். ஏ., பி. எல்., அவர்களால் எழுதப்பெற்றது.

இதன்கட் சேரர்குலத்தினர்க்கு, அவர்நாட்டில் இக்காலத்தில் வழக்கத்திலிருக்கும் மருமக்கட்டாயமுறையே முற்காலத்திலும் வழங்கிவந்ததென்று பலசான்றுகளால் ஆராய்ந்து காட்டப்பட்டிருக்கிறது.

அது இக்காலத்துள்ள புலவர்பலர்க்கும் புதுவிருந்தாயமைந்து மகிழ்வூட்டிவருகிறது. பாரதியார் எழுதும் ஆராய்ச்சியுரை ஒவ்வொன்றும் அப்படிப்பட்டதே.

அவற்றுள்ளும் இவ்வாராய்ச்சி மறந்தொழிந்திழந்த (பண்டைச்) சேரர் மருமக்கட்டாயத்தை நாட்டற் கெழுந்ததொரு போராட்டமாயும் உள்ளது.

இத்தகைய போராட்டத்தில் எதிர்ப்போரைப் பழித்துரைத்த வென்றி விடயத்தை விரித்துரைத்து மேற்செல்லும் மேலான வாத முறைக்கு இது வழிகாட்டியாயிருக்கிறது.

தம் துணிபுரைத்தற்குச் சாதனமான சான்றுகள் ஒருசில பிறர் துணிபுரைத்தற்கும் சாதனமாவனபோன்று தோன்றுமவையொவ்வொன்றும் அவ்வாறன்றென்றுகாட்டி நாட்டுதற்கேற்ற தடைவிடைகளை யுட்கொண்ட தொடைநடையினால் விடயங்களை விளங்கச்சொல்லிச் செல்லும் திறமானது வழக்கியன்முறையால் மன்றாடற்றிறமையின் மாண்பமைந்து விளங்குகின்றது.

ஆராய்ச்சியுரை வரைவார்க் கிதோர் அருமைவாய்ந்த உரையாணியாய் அமைந்துள்ளது.

இன்பம்பயக்கப் படிப்பார்க்கு இஃதோர் விநோதமாகத் தோன்றத்தக்கது.

பாரதியாரவர்கட்குள்ள தமிழ்மொழிப்புலமைக்கும் சங்கநூற் பயிற்சிக்கும் இவ்வாராய்ச்சியுரையொன்றே வாய்சான்ற சான்றாய் அமையவல்லது.

"இன்னானுக்கு, இன்னான்றேவி இன்னாள், ஈன்றமகன் இன்னான்"என்றவாய்பாடுடைய பதிற்றுப்பத்துப்பதிகச்சொற்றொடர்க

ளெல்லாம் மருமக்கட்டாயமுறையை நாட்டுதற்கே ஏற்றசாதன மென்று காட்டியிருக்கும் பாரதியாரது கல்வித்திறமையும் சொல்வித் தகமும் பாராட்டத்தக்கன.

இவ்வாராய்ச்சிக்கு அடிப்படையான சாதனம் மலைநாட்டுள் இக் காலத்தும் மருமக்கட்டாயமுறை இருந்துவருதலேயாம். அதனை முதலில் நன்குவிளக்கிக்கொண்டு, முறையே பழைய சங்கநூற்சான்று களை அதற்கு இணங்கக்காட்டிச்செல்வது 'நிரந்தினிதுசொல்லுதல்' என்னும் சொல்வன்மையைப் புலப்படுத்துகிறது.

சொல்வன்மையும் நுண்ணுணர்வும் கொண்டு தாம்பிடித்த தனையே சாதிக்கவிரும்பும் ஒருசிலர்போலன்றிச், செப்பத்தினின்றும் திறம்பாதுநின்றே சங்ககாலநிகழ்ச்சியினை உள்ளவாறுணர்ந்து, உணர்ந்தவாறு பிறர்க்குணர்த்தும் பாரதியார்தம் உழைப்பும் ஊக்க மும் ஒப்புரவாண்மையும் நன்குமதிக்கத்தக்கன.

சுருங்கச்சொல்லின், இவ்வாராய்ச்சியுரையானது அளவினாற் சிறியதேயாயினும் புலமையாற் பெரியதென்று போற்றத்தகும் என் பதே எனது துணிபு.

(ஒப்பம்) திரு. நாராயணையங்கார்,
தமிழ்ச்சங்கம், மதுரை.

உ

அண்ணாமலைப்பல்கலைக்கழகத்துத் தமிழ்ப்பேராசிரியர் திருவாளர்

## பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியாரவர்கள்

எழுதியது.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழ்ப்பகுதித்தலைவர் திரு. சோமசுந்தரபாரதியாரவர்கள் M. A., B. L. அரிதின் ஆராய்ந்தெழு திய "சேரர்தாயமுறை" என்னும் ஆராய்ச்சிக்கட்டுரையைப் படித்துப் பார்த்தேன். இஃது இக்காலத்துக் கேரளநாட்டினரிடைக் காணப் படும் மருமக்கட்டாயமுறைக்குச் சங்கநூல்களில் ஒன்றாகிய சேர வேந்தர்களின் சிறப்புக்கூறிய பதிற்றுப்பத்து என்னும் பழந்தமிழ்

நூலின் பதிகப்பாட்டுக்களிற் கண்ட குறிப்புக்களை ஆதாரமாகக் கொண்டு வரையப்பட்டுள்ளது. இவ்வாராய்ச்சி தமிழில் இதுவரை யாரும் மேற்கொள்ளாததொன்று. அப்பதிகப்பாடல்களில் தாம் மேற்கொண்ட பொருட்கு இயைந்த பகுதிகளுக்குத் திரு. பாரதியா ரவர்கள் கண்ட பொருள், முட்டுப்பாடின்றியும் கலக்கமின்றியும் தெளிவுறுத்தப்பட்டுளது. அப்பொருள் வலியுறுதற்குரிய பற்பல சான்றுகள் திறனுற எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. பழமையே நினைவுகூர்ந்தொழியாது உண்மையாராய்ச்சியிற் றலைப்படலும், முன் னூல்களிற் கண்டவொன்றை யெதிர்த்தாராய்தலும், உண்மையெனக் கண்டவற்றைக் காரணங்களையுமுன்னிட்டு மறையாதுவெளிப்படுத்த லும் நம் பாரதியாரவர்கள்பாற் காணப்படும் அருஞ்செயல்களாம். இவற்றிற்கு இக்கட்டுரையொன்றே போதிய சான்றாக நின்று திகழ் கின்றது. பதிற்றுப்பத்துப்பதிகப்பாடல்களிற் கண்ட பகுதிகள் இன்னசேரற்கு இன்னான்தேவியின்றமகன் இன்னான் என்று பின் ஒருசேரன் சுட்டப்படுதலான், அவற்குத் தாயும் தந்தையும் வேறாக அவன் முன்னைச் சேரற்கு ஏதோ ஒருவகைத்தொடர்புடையனவன் என்பது போதரும். அத்தொடர்பு அரசியலுரிமை யெனவும், அவ் வுரிமைக்கு அவன் உரியனாதல் மருமக்கட்டாயமுறையானேமெனவும், அதனால் அவற்கு முன்னைச்சேரன் மாமனாவனெனவும், அச்சேரன் சோதரியே பின்னவன் தாயாவளெனவுங் கொண்டு மருமக்கட்டாய முறையை நிறுவிய திரு. பாரதியாரவர்களின் நுண்மாணுழைபுலமும் நூலறிவும் ஆராய்ச்சித்திறனும் அறிஞருள்ளத்தை வியப்புறச்செய்து இன்புறுத்துவனவாம். இவர்கள் ஆராய்ச்சித்துறையெல்லாம் இங் ஙனமே புதியநெறியிற்சென்று பழமையின்உண்மையைப் புலப்படுத் தும் இயல்பினவாமென்பது முன்னர் இவர்கள் வெளிப்படுத்திய சில ஆராய்ச்சிக்கட்டுரைகளானும் உணரலாம். "தொன்மையவாமெனும் எவையும் நன்றாகா, இன்று தோன்றியநூலெனும் எவையும் தீதாகா" என்னுங் கொள்கையைக் கடைப்பிடித்து ஒழுகும் திரு. பாரதியா ரவர்களின் ஆய்வுரை புலவருலகத்துக்கு நல்லவிருந்தாதலை யறிந்து மகிழ்ச்சியடைகின்றேன். நீடுவாழ்க!

அண்ணாமலைநகர்,
26-2-35.

(ஒப்பம்) மு. கதிரேசன்.

௫

## கால்நடை மருத்துவ இலாகாவிற் பென்ஷன்பெற்ற மேலதிகாரி திருவாளர் ராவ்சாகிப்

## வி. பி. சுப்பிரமணியமுதலியாரவர்கள் G. P. V. C.

## எழுதியது.

(ஆங்கிலக்கடித மொழிபெயர்ப்பு.)

என் அன்பிற்குரிய ஐயா!

...... தங்கள் 'சேரர்தாயமுறை' ஆராய்ச்சிக்கட்டுரையைப் பற்றிய விவரமான என்கருத்தை எழுதி இப்போது அனுப்புகிறேன். இது வரையறையும் தெளிவு மற்ற பொதுவுரையாகக் கருதப்பெறு தென நம்புகிறேன். தங்கள் 'சேரர்தாயமுறை' யையும் அதற்கு மறுப்பாகப் பண்டிதர் திரு. மு. இராகவையங்காரவர்கள் எழுதி வெளியிட்ட சேரர்தாயவழக்கினையும், அம்மறுப்பைமறுக்த நீதிவாதி திரு. L. கிருஷ்ணசாமிப்பிள்ளையவர்களின் 'சேரர்தாயமுறை'க் கட்டுரையையும் நான் படித்துமுடித்தபிறகே இத்துடன் அனுப்பும் என் கருத்துரை எழுதப்பட்டது. இதுவரை உலகறியாப் புதிய செய்திகள் இனி வெளிவராதலன்றித் தங்கள் கட்டுரைமுடிபுகள் அசைய மாட்டா.

ஏறக்குறைய ஆறு ஆண்டுகளுக்குமுன் (1929-ஆம் ஆண்டு பெப்ருவரி-மார்ச்சு மாத வெளியீட்டில்) செந்தமிழ்ப்பத்திரிகையில் தங்கள் 'சேரர்தாயமுறை' யைப் படித்துள்ளேன். அக்கட்டுரை மெய்ம்மையாராய்ச்சிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாம் என்பதே அப்போது அக்கட்டுரை என்னுள்ளத்தே தோற்றுவித்த கருத்தாம். தங்கள்வாதங்கள் திட்டமானவையாய், நேரக்கூடிய தடைகளுக்கும் தக்கவிடைகளாய்நின்று பதிற்றுப்பத்துப் பதிகங்களுக்குத் தாங்கள் கூறும் செம்பொருட்பொருத்தத்தை எனக்கு வலியுறுத்திக்காட்டின. அன்றியும், இதில் தாங்கள் கண்ட முடிபுகள், "ஒருநாட்டில் நடைபெறும் வழக்கானது புதிதிடைவந்ததெனக் காட்டும் தக்க பிற வேறுசான்றில்வழி ஆண்டு அப்படியே முற்காலத்தும் வழக்குப் பெற்றிருந்ததென்றே கொள்ளவேண்டும்" என்னும் சரிதஅளவை அறிவுநூற்றுணிபுக்குச் சாலப் பொருத்தமுடைத்து.

தங்கள் விருப்பப்படி தங்கள்கட்டுரையை யான் மறுமுறையும் படித்துமுடித்ததால் யான் முன்கொண்டகருத்தே மிகவும் வலியுறுவ தாயிற்று.

இளங்கோவடிகளும் அவருரையாளராகிய அடியார்க்குநல்லா ரும் எடுத்தாளும் மகள் என்னும் மொழி புதல்விப்பொருளன்றிப் பிறிதுபொருள் தாராதாயின், பதிகங்களுக்குப் பொருள்விளக்கத் தாங்கள் மேற்கொண்ட பெருமுயற்சி பயனற்றதாமென்று மேற் குறித்த செந்தமிழ் 134-ஆம் பக்கத்தில் தாங்கள் கூறுகின்றீர்கள்.

தனக்குண்மையினுரிய மனைவி என்ற பொருள் மகள் என்ற மொழிக்கு இலதாமாயினுங்கூட, பதிகமியற்றியோர் சேரர்க்கு மரு மக்கட்டாயமுறையைத் தவறாகச் சார்த்தினைத்தாரென்றசெய்தி யைத் தாங்களே முதன்முதலில் மறுக்கவொண்ணாவாறு நிறுவிய நற் பணிசெய்திராவீர்கள். ஆனால், மகள் என்ற சொல்லுக்கு மனைவிப் பொருள் உண்டென்பது தங்களாலேயே பின்னால் சான்றுகாட்டி நிறுவப்படுகின்றது. பதிகங்கள் மருமக்கட்டாயமுறையைக்குறியாது மக்கட்டாயவழியினையே குறிக்குமெனக் காட்டக்கருதி வருந்தி முயன்றீரெல்லாராலும், தங்களின் உரைமுகத்தே, பதிக ஆசிரிய ரது தவற்றினை அகற்றிக்காத்தல் ஆகாது. உண்மையில் மகட்பொருள் விளக்கம் என்ற தலைப்பின்கீழ்த் தாங்கள் விளக்கிய நியாயவாதங்க ளால் மேற்கூறிய முயற்சியாளர் அப்பதிக ஆசிரியர்க்கு வழங்கிய வழுநிலையினின்றும் அவரைத் தாங்களே மீட்டுத்தந்துள்ளீர்கள்.

"பிறசான்றுகள்" என்ற தலைப்பின்கீழ்த் தாங்கள் விளக்கும் நியாயங்கள், முதலிலே அசைக்க இயலாதவாறு தங்களால் நிறுவப் பெற்றுள்ள "சேரர்தாயமுறையைப்பற்றிய தங்கள் முடிபுகளை" மீண் டும் நன்று வலியுறுத்துகின்றன.

பதிகங்களில் மகன் என்றசொல் வந்தமையானே பதிகங்களின் பொருள்பற்றிய இடர்ப்பாடுண்டாயதென்று எனக்குத் தோற்றுகின் றது. தாங்கள் தெளிய விளக்கியுள்ளவாறு பதிகங்களின் ஆசிரியரால் மகன் என்னும் மொழி செழும்பொருணயத்துடன் வழங்கப்பட் டுள்ளது. யானறிந்தவரையில் மகன் என்னுஞ் சொல்லைவிட, அன்றி

அதனை ஒப்பவாகிலும், பதிக ஆசிரியரது கருத்தைவிளக்குதற்குரிய சிறந்தசொல் வேறொன்று தமிழ்மொழியில் இல்லை. அரசுரிமைத் தந்தையான அம்மான்பால் தன் தாய்வழியரசினை உரிமையிற்பெறும் அரசுரிமைப் புத்திரனாகிய மருமானைக் குறிக்க மகன் என்ற சொல்லை வழங்கிய பதிக ஆசிரியர், 'ஞானபிதா' 'ஞானபுத்திரன்' என்னும் வழக்கினை உளத்துக்கொண்டார்போலும். கைவல்யநவநீதம் தத்துவ விளக்கப்படலம் 19-ஆம் செய்யுளில் ஞானகுரு தன் மாணவனை 'வாராய் என் மகனே!' என்று விளித்தல் ஈண்டு நோக்கற்பாற்று.

(ஆங்கிலத்தில் ஒப்பம்.) **வெ. ப. சுப்பிரமணியமுதலியார்,**
வெள்ளகால், திருநெல்வேலி ஜில்லா. **26–1–35.**

## பாராட்டு முன்னுரை.

---

*சென்னைச் சர்வகலாசாலைத் தமிழ்ப்பேரகராதித்*
*தலைமைப் பதிப்பாசிரியர்,*
**திரு. S. வையாபுரிப்பிள்ளையவர்கள் B. A., B. L.,**
எழுதியது.

சிறந்த தமிழறிஞரும் அண்ணாமலைப்பல்கலைக்கழகத்துத்தமிழ்ப் பேராசிரியருமாகிய திரு. சோமசுந்தரபாரதியாரவர்கள் எழுதிவெளியிடும் இந்நூலுக்குப் பிறரொருவரது முன்னுரையொன்று வேண்டுமென யான் கருதமாட்டேன். 1929-ஆம் வருஷத்திலே பாரதியாரவர்களின் வாசஸ்தானமாகிய பசுமலைக்கு யானும் எனது நண்பரொருவரும் சென்றிருந்தோம். அப்பொழுது சோர்தாயமுறையைக்குறித்து அவர்கள் ஆங்கிலத்தில் எழுதியிருந்த கட்டுரையிற் சிலபாகங்களை எங்களுக்கு வாசித்துக்காட்டினார்கள். அவர்களுடைய ஆராய்ச்சித்திறத்தினைப் பெரிதும்வியந்து, அக் கட்டுரையினைச்

சரித்திரசம்பந்தமான மாதாந்தப்பத்திரிகைகளில் வெளியிட்டுப் பலர்க்கும் உபகாரமாம்படி செய்யவேண்டுமென வற்புறுத்தினேன். பின்னர் அதனைத் தமிழ்ப்படுத்திச் செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிட்டார்கள். இங்கேகூறியபடி எனக்கும் இந்நூலுக்கும் ஒருசிறு தொடர்பு இருத்தல்பற்றியே, பாரதியாரவர்களின் வேண்டுகோளின்படி ஓர் முன்னுரை எழுதுதற்கு யான் மனமுவந்து இணங்கினேன்.

பழந்தமிழ்க்குடிகளுள் ஒருசாராராகிய சேரமரபினருள் எவ்வகையான தாயக்கிரமம் அமைந்திருந்ததென்று ஆராய்ந்துதெளிவதே இந்நூலின் நோக்கம். இந்நூற்பொருளாகிய தாயவழக்கு பண்டைக்காலத் தமிழ்ச்சமுதாயத்திற்கு அஸ்திவாரம்போன்றது. தமிழ்மக்களது பூர்வசரித்திரவிளக்கத்திற்கு மிக இன்றியமையாதது. ஆதலால் இந்நூலின்கண் ஆராய்ச்சிக் கெடுத்துக்கொண்ட பொருள் மிக மிக முக்கியமானதாகும். இதுவரை, தமிழ் அறிஞர்களும் தமிழ் நாட்டுச் சரித்திர அறிஞர்களும் ஆராய்ந்துவந்த பொருள்களில் இந்நூற் பொருளைக்காட்டினும் சிறந்ததொன்றைக் காணுதல் அரிதாம். இதனை வாசகர்கள் நன்குணர்தல்வேண்டும்.

இந்நூல் தோன்றுவதற்கு முன்புதானே, இப்பொருளைக் குறித்துத் தமிழாராய்ச்சியாளர்கள் கவனஞ் செலுத்தியிருந்தார்கள். ஸ்ரீமான் மு. இராகவையங்காரவர்கள் சேரன்செங்குட்டுவன் என்னும் நூலில் பாரதியாரவர்களது கொள்கையொடு மாறுபட்ட மக்கட்டாயக்கொள்கையை வற்புறுத்தி எழுதியிருந்தார்கள். காலஞ்சென்ற ஸ்ரீமான் எம். ஸ்ரீநிவாஸ ஐயங்காரவர்கள் தமது தமிழாராய்ச்சியுரைகளில் (Tamil studies) பாரதியாரவர்களது கொள்கையை ஒருவாறாக முற்படவுணர்ந்து எழுதியிருக்கிறார்கள். ஆனால் பாரதியாரவர்கள் எழுதியதன்பின்னரே இப்பொருள் தமிழ்மக்களது பூர்வசரித்திரவுணர்ச்சிக்கு எத்தனை யின்றியமையாததென்பது அறிஞர்களால் நன்குணரப்பட்டது. இவ்வுணர்ச்சி தோன்றுதற்கும் பல அறிஞர்களும் பலபடியாக இப்பொருளை ஆராய்தற்கும் பாரதியாரவர்களே முக்கியகாரணராயுள்ளார்கள். பாரதியாரவர்களே இப்பொருளின் சரித்திரகௌரவத்தை நாமனைவரும் நன்குணரும்படி செய்தவர்கள்.

மேற்கூறியவற்றால் இந்நூல் மறுப்புரையாகவும் துணிந்துரையாகவும் இயன்றுள்ளதென அறியலாகும். ஆனால், ஆராய்ச்சியால் உண்மைகாணவேண்டுமாயின், அது தருக்கநெறிபிறழாத வாதத்தினால் ஆகுமேயன்றிப் பிறவாறு ஆகாது. வாதம் இன்றியமையாததாக இருப்பதினால், அதனைக் கௌரவபுக்தியோடு நிகழ்த்துதல் வேண்டும். எவ்வகையானகுற்றமுமின்றிச் செவ்வையாகவும் கௌரவமாகவும் எழுதிய மறுப்புரைகளுள்ளே பாரதியாரவர்களியற்றிய இந்நூல் மிகச் சிறந்ததாகும்.

இச்சிறந்த ஆராய்ச்சிநூலினைக் கற்றுத் தமிழறிஞர்களனைவரும் பெரிதும் பயனடைவார்களென்பது திண்ணம்.

(ஒப்பம்.) **எஸ். வையாபுரிப்பிள்ளை.**

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 9 | 7 | பதுமனை | பதுமற்கு |
| 12 | 18 | எனவும் | என்பது |
| 16 | 21 | யென | யென்பது |
| 21 | 16 | வென்வேற்கிள்ளி' | 'வென்வேற்கிள்ளி' |
| ,, | 17 | வடிவேற்கிள்ளி' | 'வடிவேற்கிள்ளி' |
| ,, | 21 | துலக்குகிறது | துலங்குகிறது. |
| 23 | 9 | ௨௭௭-௩௨௧ல் | ௨௭௭-௩௨௧-இல் |
| 24 | 9 | தேவி' | 'தேவி' |
| 26 | 20 | அதுமட்டுமில்லை. | அதுமட்டுமன்று. |
| 32 | 30 | ஒவ்வொருவரையும் | இருவரையும் |
| 34 | 10 | பெண்டிரில்லை, | பெண்டிரல்லர்; |
| 35 | 13 | முறையில்லை | முறையில்லை. |
| 39 | 28 | வழிததோன்றல் | வழித்தோன்றல் |
| 42 | 13 | மில்லை; | மல்லர்; |
| 43 | 5 | அனாரிய | அநாரிய |
| ,, | 23-24 | தமது நாட்டுத்தாய்வழித்தாய முறையைவிடாது | தமதுநாட்டுத் தாய்வழித் தாயமுறையைவிடாது |
| ,, | 27 | பிறமக்கட்டாயிகள் | பிற மக்கட்டாயிகள் |
| ,, | 31 | Kingship | Kinship |
| 44 | 2 | தாம்தாயைக்கொன்ற | தாம் தாயைக்கொன்ற |
| 19 | 26 | அத்தவன்பெற்ற | அத்தவன் தன்னைப்பெற்ற |
| 44 | 12-13 | வெள்ளையானைமீது | வெள்ளையானையின்பின் குதிரைமீது |

உ

# சேரர் தாயமுறை.

## பகுதி க. முன்னுரை.

கழிந்த ஐந்து நூற்றாண்டுகளுக்கு மேலாகக் கேரளத்திற் ப வகுப்பார் பெண்வழியில் மருமக்கட்டாயமுறைபேணுவதைக் காணு கின்றோம். நாம் அறிய இவ்வழக்கம் நாயர்பெருமக்களிடைமட்டு மில்லை; தென்திருவாங்கூரில் நாஞ்சில்நாட்டு வேளாளர்முதல் வட மலையாளத்தில் மகம்மதிய மாப்பிள்ளைமாரும், பொய்யாணூர்க்கூற்றத் துப் பார்ப்பனநம்பூரிகளும், தென்கன்னடத் தொன்மக்கள் பலரும், துளுவர் கொங்கணர் சிலரும் இத்தாய்வழித்தாயமுறையையே நெடு நாளாகக் கையாண்டுவருகின்றனர். இவ் வழக்கமுடையாரெல்லாரும் குடமலைக்குமேற்கே பண்டைச் சேரநாட்டின் பகுதிகளான மேலைக் கடற்கரைநாடுகளிலே இருப்பதாகவும் அறிகின்றோம். பார்போசா, சோணரத்து முதலிய ஐரோப்பிய யாத்திரிகர் மேலமலைத்தொடருக்கு மேற்குநிலமக்கள்பலர்தம்முள் பிறிதிடத்திற் காணரிய இப் பெண் வழித்தாயம் பெரிதும் வழங்கப்பெறுவதைக் கவனித்துத் தம் யாத் திரைக்குறிப்புக்களில் இவ்வதிசயச்செய்தியை எழுதியிருக்கின்றனர்.

கேரளவழக்கத்தை நாம் அறிவோம். எனினும், இது புதி தாகக் குடபுலத்தில் எப்படியோ வந்தேறிநடக்கும் ஒரு இடைக்கால வழக்கமெனக்கொண்டு வாளா அமைகின்றோம். சேரநாடு தமிழகத் தின்பகுதியென்றும், சேரர்பரம்பரையிலும் மற்றைத் தமிழ்வேந்தர் குடிமரபாம் மக்கட்டாயமே பண்டைநாளில் அடிப்பட்ட பழவழக் காய் ஆட்சிபெற்றிருந்ததென்றும் நாம் நம்புகின்றோம். எப்படியாயி னும் சங்ககாலத்துக்கு நெடியபல நூற்றாண்டுகளுக்குப்பின்னரே சேர நாட்டில் மருமக்கட்டாயமுறை புதுவழக்காய்ப் புகுந்திருக்கவேண்டு மெனக் கொள்கின்றோம். அப்படி நாம்கொள்வதால் அதன் உண்மை யினை எனைத்தளவும் ஆராய்தற்கு அவசியம் நாம் காணவில்லோம்.

நம்மிடத்து இம்மனநிலைக்குத் துணையாகுங் காரணங்கள் பலவுள். எதனையுமே ஆராயாமல் கண்டபடிகொண்டமையும் இயல் நமது பெரியமாட்சி. ஊழொன்றிற் கிறைமைகொடுத்து, ஊக்கத்தை அறத் தொலைத்துப் பாழொன்றப் பொறுமையுடன் பலதுறைகளிலும் நாம் பயின்றுவருகின்றோம். இப்பழக்கத்தால் நாம் பெற்ற பயன் பலவற்றுள், உண்மைகளைத் தேடுவதிற் பெருவெறுப்பும், கையறவிற் கழி விருப்பும் என இரண்டுமாம். இவ்விரண்டும் நம் மனத்தில் நாளடைவில் மிகத்தடித்து வேரூன்றிவளர்கின்றன. மேனாட்டார் கண்டளந்து சொல்லுமுன்னே நமது பழஞ்சரிதங்களை நாம் உணரோம். நம்மிடையே கிடையாத நமது அரிய பழைய தமிழ்நூல்களெல்லாம் இன்றளவில் இலண்டனிலும் பாரிசிலும் இருக்கப் பார்ப்போம். நமது தற்காலநிலைக்கு, இவ்வாறு உண்மைநலம்பேணாத நம்மவரின் பெருநொதுமல்மனப்பாங்கைச் சிறிதல்ல, செம்பாதி காரணமாக் கூறல்கூடும்.

'பார்ப்பனருக்கும், பணமுடைய மேல்வகுப்பார் பலருக்கும், பெண்டிரெல்லாம் மணமற்ற இன்பத்திற்குத் துணையாகி வாழவேண்டும்' என்ற இழிவழக்கைக் கேரளத்தில் வடவாரியமுனிப்பொருநர் பரசுராமர் அந்நாட்டார்நலம்பேணிப் புகுத்தியதாய் நம்பூரிமார் சிலர் நவில்வதனைப் பழமறைபோற் கொள்ளுகின்றோம். சங்கநூல்களில் யாதொன்றும் நம் மக்கட்டாயமரபிற்கு மாறாய தாயமுறை சேரருக்குச் சுட்டிலதென்று ஒருதலையாத் துணிகின்றோம். இவைகொண்டு மருமக்கட்டாயமுறை சங்ககாலத் தமிழ்ச்சேரர்க்கில்லாத—பின் பெழுந்த—புதுவழக்கமென்று அதனிற் சங்கையற்றுத் தெளிந்து நிற்போம்.

நாம் அறிய நெடுங்கால ஆட்சியுடைய வழக்கொன்றைப் புதிய தெனத் தெளிவிக்கும் தக்கசான்று காணுமட்டும், வழங்குமிடத்து அது நிலைத்த பழவழக்காய்க் கொள்ளுவதே ஆராய்ச்சித்துறையில் அறிவுடைய நெறியாகும். தொல்லைச்சேரர் கையாண்ட தாயமுறைக்குத் தமிழகத்திற் பழம்பனுவல் ஏதேனும் கரிபகரக் காணுவமேல், அதன் உண்மை ஆராயத்தக்கதாகும். சேரர்குடிப்புகழ்விரிக்கும் தொன்னூல்கள் சிலவற்றுள் இதுபற்றிய சான்று சிறிதுள்ளதென

வுகித்தற்கு இடமுண்டு. ஊன்றிநோக்கில், இந்நூல்கள் சிலவற்றுள், பழஞ்சேரர்பரம்பரையில் மக்கள்வழி பேணப்படாமல் தற்காலக் கேரளத்தார் கையாளும் மருமக்கட்டாயமுறையே வழங்கியதாய்க் கரிகூறும் சான்றுண்மை காணுகின்றோம். உண்மையினை உணர்தற்குக் காய்தல் உவத்தல் இல்லாத நடுநிலையில் நின்று நாம் ஆய்தல் வேண்டும்.

## பகுதி உ. தாயமுறை நியமங்கள்.

ஆயுமுன்னர் நாம் அவசியம் அறிந்துவைக்கவேண்டியவாய் இவ்வாராய்ச்சிக்கு உதவுவனவாய தாயமுறைவழக்கங்கள் சிலவற்றை வரையறுத்துத் தெளியவேண்டும். கேரளத்தில் வழங்கிவரும் மருமக்கட்டாயமுறைக்கு அடிப்படையாயுள்ள சில வருமாறு:—

(1) ஆண்வழியிலன்றிப் பெண்வழியிலேயே உறவுமுறையுங் கிளைமரபும் ஆட்சிபெறும்; தாய்மாரே குடிபேணும் அடிமரமாய்க் கருதப்படுவர். கிளைவளமும் குடிநிதியும் பெண்வழியே தழையும் வகை முறைவகுத்துக் குடியறங்கள் நிற்பனவாகும்.

(2) மக்களெல்லாம் தாய்க்குடியின் கிளைஞராவர்; அக்குடியில் ஆடவர்கள் தம் மாமன்மார்க்குரிய வழித்தோன்றல்களாய் வரன்முறையே உரிமைபெறுவர். மருகரெல்லாரும் வயதுவரிசையிலே வரன்முறையாய்த் தனித்தனியே குடியாளும் தலைமைகொள்வர்.

(3) தற்கால நாகரிகப் புதுமாற்றம் சில புகுந்து பழவழக்கைப் பிறழ்வித்துத் தடுமாறச்செய்யுமுன்னே, கேரளத்திற் குலநிதியைப் பிரித்தாளும் பிறப்புரிமை ஆண்மக்கட்கு ஒன்றும் இல்லை. தாய்வழிகள் பிரிந்து சில புறக்குடிகள் தழையலாகும். குடிதோறும் பொதுநிதியம் பிரியாமல் வளர்வதாகும். பெண்களுக்கு நிதியாட்சியுரிமை இல்லை குடிநிதியின் பயனுகர்ந்து பொதுவாழும் உரிமை அக்குடியிற் பிறந்தவர்கள்-ஒருதாயின்வழியினர்கள்-இருபாலார்-எல்லார்க்கும் பொதுவுடைமையாக நிற்கும். பொதுக்குடியைத் தருவாடு என்று அந்நாட்டார் தற்கால மொழிவழக்கிற் சொல்லுகின்றார்.

(4) தருவாட்டின் (குடியின்) தலைமை, அதன் நிதியாட்சி மேற்கொள்ளும் உரிமையெல்லாம் மருகருள்ளே படிப்படியாய் வயது

முறைவரிசையினில் வழிமுறையே வந்திறங்கும். ஒருதலைமுறையாரின் தாயரெல்லாம் இம்முறையில் ஒப்புரிமையுடையவராய், அவர் பெற்ற புதல்வரெல்லாம் சோதரராய் வயதுமுறைவரிசையினில் ஒவ்வொருவராக இதை ஏற்கலாவர். அவர்கட்குப்பின் அவர் தாய்மாரின் பெண்மக்களின்றுடைய ஆண்மக்கட்கு அவ்வுரிமை அம்முறையே வந்திறங்கும். குடித்தலைமைபெற்று அதனை ஆள்வோரைக் காரணவர் என்றும், அவருக்குப்பின் அக்குடியில் அவ்வுரிமையடைதற்குரியவரை அநந்தரவர் என்றும் இன்று கேரளத்தில் இத்தாயமுறை வழங்குங் குடிகளிலே கூறிவருவர். மருகரெல்லாம் வயதுமுறைவரிசையினில் வழிமுறையே இவ்வுரிமை வரப்பெற்றுத் தத்தம்முறையில் ஒவ்வொருவரும் அத்தலைமை மேற்கொண்டு காரணவராகித் தம் கடனாற்றிக் கிளைதாங்கிக் குடியோம்பி (தருவாட்டைப் பேணி) ஆள்வர்.

(5) கேரளத்திற் கோக்குடிகள்தம்முள்ளும் நாடாளுங் கோவுரிமை, குடியாவார் தங்கள் சிறு குடித்தலைமையுரிமையைப் போலவே, மருகர்வழியே வரிசைமுறையில் வருவதாகும். கோக்குடியிற்பெண்கள்சிலர் தகவுடைய குறுமன்னர் குடியினரை மணந்து வாழ்வார். எனின், மனைவியர்க்குக் கணவர்குடிகளில் உறவுக்கடன் உரிமைபதவிகள் ஒன்றும் இல்லை. பெண்களெல்லாம் பிறந்தகுடியின் மட்டுமே கிளை உரிமைகடமைகளும் உரியநிலை மேதகவும் உடையராவர்.

(6) ஆண்மக்கள் தம் தந்தையர்க்குப் புதல்வரெனினும், அன்னார் குடிசிறக்க வழிநிற்கும் உரிமைபெறும் பிறங்கடையர் (வாரிசு) ஆகமாட்டார். அத்தந்தையர்க்கு வழித்தோன்றலாவார் அவருடன் பிறந்த பெண்வயிற்று மருகரேயாவர். ஆகவே, ஆண்மக்கள் தத்தம் மாமன்மார்க்குமட்டுமே வழித்தோன்றல்களாகிநிற்பர்.

இவைபலவும் மருமக்கட்டாயமுறைக்கு நிலைக்களமாய், அதனோடு ஆட்சிபெறும் அறவழக்காம். இதை மறவாமல் மனத்திருத்தித் தொன்னூல்களின் உதவிகொண்டு, பழஞ்சேரர் பரம்பரையில் வழங்கியது இத்தகைய மருமக்கட்டாயமா நாம் ஆளும் மக்கட்டாயமா என்றதொரு சிற்றாராய்ச்சியில் இறங்குவோமாக.

## பகுதி ௩. சங்கநூற்சான்றுகள்.

இவ்வாராய்ச்சிக்குத் துணையாகும் சான்றுகள் பல. அவற்றுள், சங்கநூல்கள்சிறந்தன. அவற்றுள்ளும் பதிற்றுப்பத்தே தலைசிறந்தது. சேரரைச் சோழபாண்டியருடன் சேர்த்துப்பாடும் பிறநூல்கள் போலாது, இது முழுதும் தனியே சேரரையே பாராட்டுவதாகும். பத்துப் பழம்பெரும்புலவர் ஒவ்வொருசேரனையும் பப்பத்துப்பாட்டிற் பாராட்டிப்பாடிய பாக்களைத் தொகுத்துப் பதிற்றுப்பத்து எனும் பெயரால் நின்றுநிலவ வைக்கப்பெற்றதொரு தொகைநூல் இது. இதில் முதற்பத்தும் இறுதிப்பத்தும் கிடையாமல் இடையெட்டுப் பத்துப் பாட்டுக்கள்மட்டுமே வெளிவந்துள்ளன. இவற்றின் ஒவ்வொரு பத்துப்பாட்டின் தொகையிறுதியில் அப்பாட்டுடைக் கோச் சேரனின்குடிவழியும் அவன் வெற்றி முதலிய சில பிறசிறப்புக்களும் அடங்கிய பதிகமொன்று சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆகவே சேரர் குலமுறை தெளிவதற்கு இப்பதிகங்கள் மிகவும் உபகாரப்படும். இப் பதிகப்பாட்டுக்களில் சேரர்குடிவழிகூறும் அடிகளையும் தொடர்களையும் ஆதாரவாகக்கொண்டே பண்டிதர்பலரும் இதுகாறும் இச்சேரர் குலமுறை கிளத்தியுள்ளனர். அதனால் ஈண்டு அவ்வடிகளையும் தொடர்களையுமே முதலில் நாம் ஊன்றிநோக்கி அவற்றின்பொருளும் குறிப்பும் ஆழச் சூழ்ந்து தெளியக்கடவோம். அவை வருமாறு:—

1. முதற்பத்து:—முற்றுமே அகப்பட்டிலது.

2. இரண்டாம்பத்து:—இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடியது.

> "மன்னிய பெரும்புகழ் மருவில் வாய்மொழி
> இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு,
> வெளியன் வேண்மாள் நல்லினி யீன்றமகன்"

3. மூன்றாம்பத்து:-பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடியது.

> "இமைய வரம்பன் தம்பி.............
> .........................................
> பல்யானைச்செல்கெழுகுட்டுவனை"

4. நான்காம்பத்து:— களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடியது.

"ஆராத் திருவிற் சேர லாதற்கு,
வேள் ஆவிக் கோமான்
பதுமன் றேவி யீன்ற மகன்"

5. ஐந்தாம்பத்து:—கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைக் கரணமமைந்த காசறுசெய்யுட் பரணர் பாடியது.

"வடவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்
குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்கு,
சோழன் மணக்கிள்ளி யீன்றமகன்"

6 ஆறாம்பத்து:—ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடியது.

"குடக்கோ நெடுஞ்சேர லாதற்கு, வேளன்
ஆவிக் கோமான் றேவி யீன்றமகன்"

7. ஏழாம்பத்து:—செல்வக் கடுங்கோவாழியாதனைக் கபிலர் பாடியது.

"மடியா வுள்ளமொடு மாற்றார்ப் பிணித்த
நெடுநுண் கேள்வி யந்துவற்கு, ஒருதந்தை
யீன்றமகள்-பொறையன் பெருந்தேவி யீன்றமகன்"

8. எட்டாம்பத்து:— பெருஞ்சேரலிரும்பொறையை அரிசில் கிழார் பாடியது.

"பொய்யில் செல்வக் கடுங்கோ வுக்கு,
வேளாவிக் கோமான் பதுமன்றேவி யீன்றமகன்"

9. ஒன்பதாம்பத்து:—இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங் குன்றூர்கிழார் பாடியது.

"குட்டுவ னிரும்பொறைக்கு, மையூர் கிழாஅன்
வேண்மாள்-அந்துவஞ்செள்ளை யீன்ற மகன்"

10. இறுதிப்பத்தும் இறந்ததேபோலும்.

இவையிற்றை உற்றுநோக்குங்கால், பதிகம் எட்டனுள் இரண்டு நான்கு ஆறுமுதல் ஒன்பதான ஆறுபதிகத்தொடர்களால் அவ்வப் பதிகப்பாட்டுடைத்தலைவனை கோச்சேரன் ஒவ்வொருவனும், ஒரோர் கோமாள் (கோக்குடிப்பெண்) தன்கணவனுக்கு மகனும் மற்றொருகோச்சேரனுக்கு வழித்தோன்றலுமாய்ப் பெற்றெடுத்த தகவி... பெருமகனாகவே தோன்றுகிறான். மூன்றும்பதிகமான மற்றொன்றும் அதனையே வலியுறுத்தும். ஏனெனில், அதிற் பாடப்பெற்றவன் இரண்டாவதன் தலைவனை இமையவரம்பனுக்குத் தம்பியெனப்படுவதா... இப்பதிகமும் இரண்டாம்பதிகச்செய்யுள்கூறும் குலமுறையையே கூறுவதாகும். எஞ்சிய ஐந்தாம்பதிக அடிகள் சிறிது சங்கைக் கிடனாக நிற்கின்றன. இதில் ஏதோ ஒரு சொற்குறைவு காணப்படுகின்றது.* அக்குறைவால் இப்பதிகத்தொடர் இதுவரை சிறிது பிறழ்ச்சி யுணர்ச்சிக்கு ஒருவாறு இடந்தந்துவருகிறது. இப்பதிகத் தொடர்களெல்லாம், பொருள்நேர்மையால் ஒருதிறப்படுமாயினும், சொன்னீர்மையாற் பலதுறைப்பட்டுநிற்கின்றன. 4, 6, 8 பதிகங்கள் ஒருவகை; 2, 9 ஒருவகை; 3-ஆவது தனிவகை; 7-ஆவது ஒருவகை; 5-ஆவது ஒருவகை; ஆக இவைகள் இப்படிப் பலபட அமைந்துகிடப்பதால், இப்பதிகத் தொகுதியை இம்முறையிலேயே பகுத்துத் தனித்தனியே அவ்வத்தொடர்வகைகளின் சொல்லாற்றலையும் பொருளாக்கத்தையும் ஈண்டுச் சிறிது ஆழத் துருவி ஆராயப்புகுவோம்.

(i) பதிற்றுப்பத்து ச, சு, அ-ஆம் பதிகத்தொடர்களின் பொருட்குறிப்பு.

(1) முதலிலே, நான்கு ஆறு எட்டுப் பதிகப்பாக்களில் அப் பாட்டுடைத்தலைவரின்தாய் அங்குப் பெயர்குறித்த சேரரல்லாத பெருந்தகையார் பிறர் ஒருவரின்தேவியெனச் சுட்டப்பட்டிருப்பது சிந்திக்கத்தக்கது. இதுவரை இப்பதிகங்களைக்கொண்டு சேரர்குல முறைகண்ட பண்டிதர்கள், ஈண்டுத் 'தேவி' என்ற சொல்லினாற்றலை விசாரியாமல் அது 'தாயை' என்னும் பொருளுடையதுபோலவே கருதிச்சென்றிருப்பதாகத் தெரிகிறது. இச்சொல், தெய்வங்களில் பார்வதி காளி துர்க்கை என்பாரையும், மக்கள்வருக்கத்துள் முறைப் பொருளில் மனைவியையு மட்டுமே குறிப்பதாகும். 'தேவி' என்ற

*இம்மூன்றும் பகுதியின் v-ஆவது உட்பிரிவைப் பார்க்க.

சொல்லுக்கு, மனைவிப்பொருளல்லது, மகள் அல்லது தநயை என்ற பொருள் இல்லை. இலக்கியம் திவாகராதி நிகண்டுகள் முதலிய நூல்களில் மகட்பொருளில் இச்சொல்லுக்கு ஆட்சிஇல்லை. எனவே, இச்சொல் இயல்புவழக்கில் மனைவியையே சுட்டவேண்டும். ஆகவே 4, 6, 8 பதிகங்களிற் சுட்டப்படும் கோச்சேரர்தாய், வேள்-ஆவிக்கோமானின் மனைவியாகவேண்டும். அதனாலே இவள் வேறு சேரருக்கு மனைவியாயிருந்திருக்கமுடியாதாகும்.

(2) நார்முடிச்சேரல், ஆடுகோட்பாட்டுச்சேரலாதன், பெருஞ்சேரலிரும்பொறை என்ற மூன்று கோச்சேரர்களை யீன்ற தாயை வேள்ஆவிக்கோமான் பதுமனின்தேவி என்றே இம் மூன்றுபதிகங்களும் விசதமாக விளக்குகின்றன. எனவே, பதுமன்மனைவியான இக்கோப்பெரும்பெண்டு இப்பதிகங்களிற் பாட்டுடைத் தலைவருக்கு முன்தோன்றல்களாகக் குறிக்கப்படும் சேரலாதன், செல்வக்கடுங்கோ என்ற இருபெருஞ்சேரமன்னருக்கும் அறக்கிழத்தியாமாறில்லை.

அன்றியும், தேவிச்சொல்லுக்கு இல்லாத தநயைப்பொருள் கொடுத்துவைத்து, வேள்-ஆவிக்கோமான் பதுமனுக்கு இவளை அவன்பெற்ற மகளெனவே கொண்டாலும், இவள் இப் பதிகங்கள் சுட்டும் இருவேறுசேரருக்கு இற்கிழத்தியாகுமுறை கொள்ளற்கில்லை.

(3) இம்மூன்று பதிகத்தும் குறிக்கப்பெற்ற வேள்பதுமன் ஒருவனேயாகவேண்டும். வெவ்வேறு வேண்மானைச்சுட்டுவதான குறிப்பு ஒன்றும் இவற்றுள் இல்லாதநிலைமையில் இவை ஒருவனையே சுட்டும் எனக் கொள்ளுவதே முறையாகும். அன்றியும், பண்டிதர் திரு. மு. இராகவையங்காரவர்களும் பிறரும் இம்மூன்றுபதிகமுமே ஆவிக்கோமான் பதுமனெனும் ஒரு வேளிர்தலைவனையே குறிக்குமென விளக்கியுள்ளார்கள். இயற்பொருளில் இப் பதிகத்தொடர்கள் சுட்டுகிறபடி இப் பதிகச்சேரரின்தாய் 'பதுமன்தேவி' ஆவளேல், சேரலாதன், கடுங்கோ என்ற இருவர்தமக்கும் இவள் மக்களீன்றாள் என்று உரைப்பதற்கு, தன் பதியாகும் பதுமனொடு மற்றிருவர் சேர்க்கையும் இவட்கு ஏற்றவேண்டும்.

பதுமனுக்கு இவளைத் தநயை எனக்கொள்ளினுமே இருபெருஞ் சேரருக்கு அறத்துறையில் இவள் மக்கள்பெறுமாறில்லை. ஒருவேளை பெற்றாலும், அப்பெற்றி உலகறிய வசைநிற்கப் பாடாண் பாட்டில் அதைப் புலவர் பாடமாட்டார்.

(1) இவளை வேள்பதுமனுக்கு மகளாக்கிச் சேரர்பலர்சேர்க்கை இவட்கு எய்தாமல் அகற்றவிரும்புவோர்கள், பதுமனை ஈங்கு இருமகளிர்ப்பெறுவித்து, ஒருத்தியைச் சேரலாதற்கும் மற்றவளைக் கடுங்கோவுக்குமாகப் பிரித்து மணம்புரிவித்து விழவுகொள்வர். மூலத்தில் இருமகளிர் எனும் குறிப்பே எங்கும் இல்லை. மூவேறுபதிகத்திற் குறிக்க வேள்-ஆவிக்கோமானை, மூன்றில் ஒன்றிற் பதுமன் என்றபெயர் குன்றவந்திருந்தும், ஒருவனே எனத் துணியும் பண்டிதர்கள், மூன்றிடத்தும் ஒருபடியே 'ஆவிக்கோமான் தேவி' எனக் குறிக்க கோமாட்டியார் ஒருத்தியல்லள், மூவரல்லர், இருவரேயாவரெனக் கொள்ளுவானேன்? ஆவிக்கோமான் மனைவியை இங்கு அவனுக்கு மகளாக்கி, பதுமனை முன்மணந்தவளை மறுபடியும் கன்னியாக்கிப் புதுமன்றல்புரிவிக்க முயலும்போது, அதன் குறுக்கே வந்துபுகும் ஆபாசத்தொல்லைகளை விலக்குதற்கு ஒருத்திவிழாப் போதாமல் அவள்நங்கைக்கு இருமகளிருண்டாக்கி, இருவரையும் இருசேரர்க்கு உரியராக்கி, அவர்தம்மால் மும்மக்கட்பெறுவித்து ஒருவரையாய் முறைப்படுத்த அவசியங்கள் எழுகின்றன. இவள் பதுமனுக்கு மனையாளாய் அவனுக்கே தநயர்களைப் பெற்றெடுத்துத் தன்கிளையிற் சேரருக்குப் *பிறங்கடைய (as heirs) மருகர்களாய் உதவுவதிற் கோமகட்குக் குறையில்லை; குடிப்பழியும்

மேலும், ஏழாம்பத்துப்பதிகத்தில் இத் தேவிச்சொல் தெளிவாக மனைவிப்பொருட்குறிப்பிலேயே வந்திருப்பதும் இங்குச் சிந்திக்கவேண்டும். ஆண்டு எனைத்தானும் இச்சொல்லுக்கு மனைவியல்லாத எப்பொருளும் பொருந்தாது. "அந்துவற்கு ஒரு தந்தையீன்றமகள்-பொறையன்பெருந்தேவி" என்று கடுங்கோவை ஈன்ற

*பிறங்கடை=வழித்தோன்றல்=வாரிசு; பிறங்கடைய=வாரிசான.

தாயை அப்பதிக ஆசிரியர் விசதமாக விளக்கியுள்ளார். அந்தவன் தந்தைக்கு மகளும் பொறையனுக்குத் தேவியும் ஆவளென, அவளை ஈன்ற தந்தையோடும் கொண்ட கணவனோடும் தனித்தனியே அக் கோமாட்டிக்கு உள்ள தொடர்பை விளக்கும் முறைப்பெயர்களைப் புலவர் விதந்து பிரித்துக்கூறியிருப்பதால், தேவிச்சொல் ஆண்டு எவ்வகையிலும் மகளைக் குறிக்கவேமுடியாது, மனைவியையே குறித்துத் தீரவேண்டும். பதிகங்களெல்லாம் ஒருபுலவராற் செய்யப்பெற்றன என்றே கொள்ளப்படுகின்றன. எப்படியும் எல்லாப்பதிகங்களிலும் ஒரேபொருளைக்குறிப்பதாய் ஒருபடியானசந்தர்ப்பத்திலேவரும் இத் தேவிச்சொல்லுக்கு யாண்டும் பொருந்துவதான மனைவிப்பொருள் ஒன்றையே இவ்வெல்லாப்பதிகங்களிலும் கொள்ளவேண்டுமென்பது நியதமாகிறது.

(5) இன்னும், இம் மூன்றுபதிகத்துக் கோச்சேரர்தாயாரைப் பதுமனுக்கு மகளாயும், சேரருக்குத் தாயர்தரும் மனைவியாயும் குறிப்பதுவே ஆசிரியர்கருத்தாமேல், சேரரொடு இவளை மனையறக்கிழமை தரும் சொற்கொண்டு சேர்த்திருப்பர். பதுமனுக்குத் தாயை எனத் தெளிவிக்கும் சொற்பெய்யத் தவறி, மிகத் தடுமாறி மனைவியதன் மறுபெயரால் அவனொடுசேர்த்து ஈக்கு இவளைச் சுட்டமாட்டார். இப் பதிகப்பாவலர்மூவருள் ஒருவர் குறையாநிறையும் கணவன்பால் தூயகாதலும்உடையராய்க் கற்பரசியராய்ப்புகழ்சிறந்த நச்சேள்ளையார் என்ப. அத்தகைய பெருந்தகையார், நிறையிறந்து, மணந்தவனைத் தணந்து, தன் பெண்ணியலை மறந்து, பிறமன்னர்பலரைக் கூடி மக்களைப்பெறுபவளை வாயாரவழுத்துவரோ? அல்லது அவள் இழிதகவைச்சுட்டித்தான் பாடுவாரோ?

(6) பாட்டுக்களிற் பதுமனுக்குத்தேவி எனப் பகர்ந்தபின்னர், "அவன்தேவி சேரருடன்சேர்க்கையினால் அவர்தமக்கு மைந்தர்களைப் பெற்றாள்" என்று உரைத்து அவளைப் பழிப்பதுடன், அவள் ஈன்ற கோச்சேரர் மூவர் புகழும் மாசுபட மூன்றுபுலவரும் பாடமாட்டார். பாடினரேல், ஒறுப்பதைவிட்டு அவர்பழிக்குப் பரிசில்தர அக்கோச்சேரர் மூவரும் சழிபித்தர்களாய் இருக்கவொல்லார். பாடினவர் பலவேறுபுலவரென்றும், பாடிப்பெற்ற பரிசில் அளவிறந்ததென்

றும் இப்பதிகங்களை விளக்குவதைக் கருதுங்கால், பாடப்பட்ட கோச்சேரரின் குற்றமற்ற குடிப்பிறப்பினையும், அவர் தம் கற்புநிறை தாய்வயிற்றில்-தந்தை வேண்மான்-ஆவிக்கோமாற்கு-மைந்தராய்ப் பிறந்து, தாய்வழியில் தலைசிறந்த சேரருக்கு மருகரென வழித் தோன்றி நின்றுயர்ந்த குறிப்பினையும், இப்பதிகத் தொடர்நிலைகள் சுட்டுவதைத் தெளியலாகும்.

ய பல நினையுங்கால் நான்கு ஆறு எட்டுப் பதிகங்களிற் புகழ்ப்பெற்ற கோச்சேரர்மூவரும், ஆவிக்கோமான் பதுமனுக்கே மைந்தரும், சேரலாதன் செல்வக்கடுங்கோ இருவருக்கும் வழித் தோன்றல்களாய்ச் சிறந்த பெருமருகரும், தம் கோத்தாயின் வயிற் றுதித்து வளர்ந்த கோப்பெருமக்களும் ஆவர் எனத் துணிவதே கருமமெனத் தோன்றக் காண்பாம்.

(ii) உ, கூ-ஆம் பதிகத்தோடர்ப் போருட்குறிப்பு.

(1) இனி இரண்டாவதாக 2, 9-ஆம் பதிகத்தொடர்களையும் அவை சுட்டும் பொருட்குறிப்பையும் நிதானித்தறிய முயல்வோம். இவை முறையே இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனை "உதியஞ்சேர லாதற்கு வெளியன் வேண்மாள்-நல்லினி யீன்றமகன்" என்றும், இளஞ் சேரலிரும்பொறையைக் "குட்டுவன் இரும்பொறைக்கு மையூர் கிழான் வேண்மாள் அந்துவஞ்செள்ளை யீன்ற மகன்" என்றும் கூறு கின்றன. 2, 9 பதிகங்கள் அப்பாட்டுடைத்தலைவரின் தாய்மாரை 'வேண்மாள்-நல்லினி', 'வேண்மாள்-அந்துவஞ்செள்ளை' என்று சுட்டு கின்றன. இவ்விடங்களில் வேண்மாள் என்னுஞ்சொல் அத் தாய் மாரின் இயற்பெயரில்லையென்பது வெளிப்படை. 'நல்லினி' 'அந்து வஞ்செள்ளை' என்பன அவர்தம் இயற்பெயரும், 'வேண்மாள்' என் பது அவ்விருவருக்கும் பொதுவாயதொரு சிறப்புப்பெயருமாயிருக்க வேண்டும். "சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்-இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்" என்னும் தொல்காப்பியச் சூத்திரவிதிப் படி, இவ்விருவர் இயற்பெயர்களுக்கும் முன்னிற்கும் 'வேண்மாள்' எனும் பொதுச்சொல், 'கோமனைவி' என்னும் பொருளுடையதொரு சிறப்புப்பெயரேயாதல்வேண்டும்.

(2) இன்னும், "வேண்மாள்" என்னும் சொல், கோவேந்தர் கோப்பெருந்தேவியரையும், கோவியலார் முடிபுனையாக் குறுமன்னர் தேவியரையும் குறிக்கும் ஒரு பொதுப்பெயராய்ப் பழந்தமிழிலக்கியங்களிற் பலவிடத்தும் வழங்கக் காண்பாம். சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் தம்கோத்தமையன் செங்குட்டுவன் கோமனைவியை "வேண்மாள்" என்று சுட்டியுள்ளார். ஆண்டு அச்சொல் அத்தேவிக்கு இயற்பெயர் என்று நினைப்பவரும் சிலருளர். உண்மையிலே இது அவளுக்கு இயற்பெயரன்றென்று எளிதில் தெளியலாகும்.

"வானவர் தோன்றல் வாய்வாட் கோதை
விளங்கில வந்தி வெள்ளி மாடத்து
*இளங்கோ வேண்மா ளுடனிருந் தருளி"

*தம்பியைச்சுட்டும் "இளங்கோ"த் தொடரையும் வேண்மாளோடு சேர்த்துச் செங்குட்டுவன்தேவிக்கு "இளங்கோவேண்மாள்" எனும் தொடர்முழுதும் பெயராய்நிற்பதெனக்கொண்டு, அதனால் அவள் கோத்தேவி (பட்டமஹிஷி)யல்லள் என்றும், மன்னன் பின்னர்மணந்த காதற்கிழத்தியாயிருக்கவேண்டுமென்றும் நினைப்பாரும் உளர். அவர்கருத்துக்குப் போதிய ஆதரவு இல்லாததோடு, அது பொருந்தாது எனவும் சிலப்பதிகார அடிகளை ஊன்றிநோக்குவோர்க்கு வெளியாகும். இளங்கோவடிகள் மாடத்தில் மன்னனுடனிருந்து மலைகாணச்சென்று மீண்டதாய் அடிகளின் மருளற்ற செந்தொடர்கள் தெளிவிப்பதாலும், இளங்கோவடிகளைச்சுட்டாமற் கோத்தேவியைத் தனியே குறிக்கும் பிறஇடங்களிலெல்லாம் இவ் விளங்கோத் தொடர் தொடுக்காமல் வாளா "மாபெருந்தேவி" [காட்சிக்காதை-வரி 110] எனவும், "வதுவை வேண்மாள் மங்கல மடந்தை-மதியேர் வண்ணங் காணிய வருவழி" [நடுகற்காதை-வரி—51—52] என்ற அடிகளில் "வேண்மாள்" எனவுமே அடிகள் கூறிப்போவதாலும், காட்சிக்காதையின் முதலில்வரும் மேற்குறித்த தொடரிலும் 'இளங்கோ' என்பது வேண்மாளுக்கு அடையாகாமல் இளங்கோவடிகளையே குறிக்கும் என்பது மலையிலக்காம். மேலும், இளையமனைவி என்ற பொருளில் 'இளங்கோவேண்மாள்' என்று குறிப்பதே அடிகள் கருத்தாமேல், அதே காதையில் பின் இவள் பெருங்கோப்பெண்டென்பதை விசதமாக்கி 'மாபெருந்தேவி' எனச் சுட்டியிருப்பது பொருந்தாதாகும். ஆதலாலும் இத்தொடர் இளங்கோவடிகளையும் கோத்தேவியான வேண்மாளையுமே குறிக்கிறதென்பது தெள்ளிதிற் கொள்ளக்கிடக்கிறது.

என்பன சிலப்பதிகாரக் காட்சிக்காதையடிகளாகும். சேரர்பெருமான் இயந்திரவாவி எழினிமாடத்தில் தம்பி இளங்கோவோடும் தனது தேவியோடும் ஓலக்கத்து எழுந்தருளியிருந்தவன், மலைவளம் காணுவமென அவரிருவருடனும் பரிவாரங்களோடும் புறப்பட்டான் என்று சுட்டும் குறிப்பின இவ்வடிகள்.

இன்னும் செங்குட்டுவன் மனைவி இக்காட்சிக்காதையிற் பின்னோரிடத்தில் 'மாபெருந்தேவி' எனவும், நடுகற்காதையில் மீண்டும் வாளா 'வேண்மாள்' எனவுமே குறிக்கப்படக் காண்கின்றோம். இதனால் 'வேண்மா'ளும், 'மாபெருந்தேவி'யும்—'கோமனைவி' என்ற ஒருபொருள்குறிக்கும் இரு விசேடணங்களென வெளியாகிறது. இவை இரண்டும் செங்குட்டுவனின் ஒரே கோமனைவியைக் குறிக்கும் இரு சிறப்புப்பெயர்களேயாகும்.

(3) மேலும், இளங்கோவுக்குச் செங்குட்டுவன் தமையன்; அதனால் குட்டுவன்கோத்தேவி அவருக்கு அண்ணியார் (மதினியார்) ஆகவேண்டும். தமிழகத்தில் தமையன்மார்மனைவியர்பெயரைத் தம்பியர் கூறுவது மரபில்லை; வழக்குமில்லை. கோவேந்தன் பெருந்தேவிக்குரிய மதிப்பும் தமிழ்மரபும் ஒருங்கேநின்று இளங்கோவடிகளை அவ ளியற்பெயரைச் சுட்டவொட்டாமல் தடுப்பது முறைமை. தமையன்பெயர் தன்பெயர்களைச் சொல்லுவதில் அத்தகைய தடை கிடையாது. அப்படியிருந்தும் இவ்விடத்தில் இவர்களியற்பெயரைக்கூடக் கூறாமல், மன்னனை வாளா 'வானவர் தோன்றல்,' 'கோதை' எனவும் தன்னை 'இளங்கோ' எனவும் கூறிப்போகும் அடிகள், மன்னவன் கோமனைவியைமட்டும் அவள் இயற்பெயர்கொண்டுசுட்டுவர் எனக் கொள்ளுவதிற் பொருத்தமும் பொருளும் இல்லை.

(4) இதுவுமன்றி, இச்சொல் மன்னர்மனைவியரின் பொதுப்பெயராகுமென்பதை வலியுறுத்தும் சான்று சில இன்னும் உள. தொன்னூல்களில் 'நன்னன்வேண்மாள்' 'உதியன்வேண்மாள்' என்ற பிரயோகங்களைக் காணுகின்றோம். ஈண்டு 'நன்னன்', 'உதியன்' என்றசொற்கள் ஆண்பாற்பெயர்கள் என்பது ஒருதலை. அவற்றோடு

'வேண்மாள்' எனும் பெண்பாற்பெயர் தொடருங்கால் நன்னன்தேவி, உதியன்தேவி என்றே பொருள்படும். அல்லாக்கால் இப் பெயர்த்தொடர்கள் பொருளற்றசொல்லின் வெறுங்கூட்டமாகும். இத்தெளிவுகண்டே மஹாமஹோபாத்தியாய சாமிநாதையரவர்களும் தம் அரும்பத அகராதியில் 'வேண்மான்' என்பதற்குச் சிற்றரசன் எனவும், 'வேண்மாள்' என்பதற்குச் சிற்றரசன்மனைவி—முடியுடையரசன்மனைவி எனவுமே பொருள்குறித்துள்ளார்கள். இவ்வாறு 'வேண்மாள்' எனும்சொல் கோவேந்தர் குறுமன்னர்மனைவியர்க்குப் பொதுப்பெயராகவழங்குவதால், அது ஒருவருக்கும் இயற்பெயராகாமல் சிறப்புமுறை குறிக்கவரும் பொதுப்பெயரேயாதல் வேண்டும் என்பது ஐயமற்றதுணிபாய்க் கொள்ளக்கிடக்கின்றது.

(5) வேண்மாள் என்பது இயற்பெயராமேல் பிறிதுசொற் சார்புவேண்டாமல் தன்னிலையில்நின்று அந்தப்பெயருடைய பெண்மகளைச் சுட்டல்கூடும். இவ்வாறு தனிவழக்கு இக்கிளவிக்கு எங்குமில்லை. வருமிடங்கள்தோறும் இது ஆண்பாற்சொற்கள் பிறவற்றைத் தழுவியேவரக் காணுகின்றோம். ஆண்பாற்பெயரொடு வாளா தொடருங்கால் அவ்வாண்மகனுக்குத் தொடர்புடையபெண்ணொருத்தியைச்சுட்டும் ஒரு சிறப்புமுறைப்பெயராவதன்றி, தொடர்புசுட்டவேண்டாத இயற்பெயராய்க்கொள்ளுவது பொருந்தாது, பொருள்தராது.

(6) ஆண்பெயரொடு பெண்ணொருத்தியினியற்பெயரைப் புணர்க்குங்கால், அவ்விருவருக்கும் உள்ளதொரு முறைகுறிக்கும் சொற்பெய்து விளக்குவதே மரபாகும். இராமன்தேவி சீதை, இராமன்தாய் கோசலை, இராமன்மைத்துனி ஊர்மிளை என்று ஒரு முறைப்பெயர்த்தொடர்புகொண்டே இருபாலார் இயற்பெயர்த் தொடர்கள் வழங்கப்பெறும். முறைசுட்டாமல் வாளா இராமன் ஊர்மிளை என்று இரண்டு இயற்பெயர்களைத் தொடுத்தால் ஒரு பொருளுமறியாமல் மருளுதற்கே ஏதுவாகும். அத்தகைய பிரயோகம் வழக்காறில்லை; மரபிறந்த தவறுமாகும்.

(7) ஈண்டு இரண்டு ஒன்பது பதிகப்பாட்டுக்களில் 'வேளியன்-வேண்மாள்' 'கிழாஅன்—வேண்மாள்' என்று ஆண்பெயர்களோடு

தொடர்ந்து பிறசொற்சார்பின்றிநிற்றலால், வெளியன் கிழாஅன் இவ்விருவருக்கும் தனித்தனியே ஒருதொடர்புடைய பெண்களுக்கு "வேண்மாட்" சொல் முறைப்பெயராயமைவது அங்கையில் நெல்லி போல் தெளியப்படும். மற்றைய 4, 6,8 பதிகங்களில் 'பதுமன்தேவி' 'ஆவிக்கோமான்தேவி' என்றிருப்பதேபோல், ஈண்டும் 'வேளியன் வேண்மாள்' 'கிழாஅன்வேண்மாள்' எனவே வருவதால், தேவிப் பொருளிலேயே வேண்மாட்சொல்லும் நிற்கிறதென்று ஒருதலையாகத் துணியப்படும்.

(8) இனி, முறைப்பெயராய்க்கொண்டாலும், இதற்கு மனைவிப்பொருளைக் கொடுப்பானேன், மகட்பொருளிலேயே இதைக் கொள்ளுவோமென்பார்க்குச் சொல்லுவேம். மகள் என்னும் பொருளில் இச்சொல்லைக் கொள்ளற்கில்லை. தம் தமையன் செங்குட்டுவன் தேவியை இளங்கோவடிகள் வேண்மாள் என்று உரைப்பதாலும், மகட்பொருளில் யாண்டும் இதற்கு ஆட்சியில்லாததாலும் மனைவியையே வேண்மாட்சொல் குறிப்பதாகும்.

(9) பதிற்றுப்பத்தின் பதிகங்களைச்செய்தவர் ஒருவரே என்பது அப்பதிக இயல்பாற் புலப்படுவதாகும். திரு. மு. இராகவையங்காரவர்கள் போன்ற பண்டிதரும் அப்படியே கொள்ளுகின்றார்கள். இஃது எப்படியிருப்பினும், இந்நூலில் ஐந்தொழியப் பிறபதிகங்களிலெல்லாம் ஆசிரியர் ஆண்பாற்சொற்களோடு 'தேவி' 'வேண்மாள்' என்ற சொற்களை நிறுத்தி, அவைகொண்டே அங்குக் குறித்த பெண்களுக்கும் ஆண்களுக்கும் உள்ள முறையை விளக்கிப்போவதனால், இச்சொற்களிரண்டுமே 'மனைவி' என்னும் ஒருபொருளில் முறைப்பெயராய்வருமாறு தெளியக்கிடக்கின்றது. இவ்வகைப்பால் 'தேவி' 'வேண்மாள்' என்ற இருசொல்லும், ஒருநிலையில் ஒன்றையொன்று விளக்கி, இரண்டிற்கும் மனைவி எனும் ஒரேமுறைப்பொருளுண்மையை வலியுறுத்தும். சுருங்கச்சொல்லின், வேண்மாள் என்பது வேண்மானின் பெண்பாலாம். வேண்மான் என்னுஞ் சொல் சிற்றரசரான வேளிர் அல்லது குறுமன்னருக்குப் பொதுப்பெயர் என்று அறிவோம். ஆகவே வேண்மாள் என்பது குறுமன்னர் தேவியர்க்குப் பொதுப்பெயராய், கோவேந்தர்மனைவியர்க்கும் சில இடத்தே முறைப்பெயராய் வழங்குமென அறியலாகும்.

(10) 4, 6, 8 பதிகங்களில் தேவி என்னும் முறைப்பொதுப் பெயர்மட்டுமின்றி, அம்முறையுடையாளான பதுமன்தேவியின் இயற்பெயர் சுட்டப்பெறுமலிருக்கிறது. 2, 9 பதிகங்களிலோ வேண்மாள் என்ற முறைப்பெயரோடு 'நல்லினி' 'அந்துவஞ்செள்ளை' எனும் இயற்பெயர்கள் தொடர்ந்து 'வெளியன்மனைவி நல்லினி', 'மையூர் கிழான் மனைவி அந்துவஞ்செள்ளை' எனத் தெளிக்கப்படுகின்றது. இங்கு இவர்கள் இயற்பெயரைத் தனித்தனியேவிளக்குவதால், இருவருக்கும் பொதுவான வேண்மாட்சொல் முறைப்பெயரேயாவதனை முன்னரே விளக்கியுள்ளோம்.

(11) இன்னும், 'வேண்மான்' என்பதற்குச் 'சிற்றரசன்' என்றும், 'வேண்மாள்' என்பதற்குச் 'சிற்றரசன்மனைவி-முடியுடையரசன்மனைவி' என்றுமே பதிற்றுப்பத்து அரும்பதஅகராதியில் மஹாமஹோபாத்தியாய சாமிநாதையரவர்கள் பொருள்குறித்துள்ளார்கள். அதனாலும் இச்சொல் இப்பதிகங்களில் சிற்றரசரான வெளியன் மையூர்கிழான் என்ற வேளிர்களின்மனைவிமாரையே சுட்டுகின்றதென்று துணியலாகும்.

(12) இவை பலவற்றாலும், இப்பதிகங்களில்வரும் வேண்மாட் சொல் மனைவிப்பொருளையே குறிக்குமென்பது விசதமாகும். ஆகவே, இரண்டாம்பதிகத்தால் வேள்வெளியனுக்கு 'நல்லினி' மனைவியென விளங்குகிறது. இனி இப்பதிகத்திலேயே இமையவரம்பன்-நெடுஞ்சேரலாதன் வேள்-வெளியனுக்கும் அவன்வேண்மாள்-நல்லினிக்கும் மகனென்று சொல்லப்படுதலால், அவன் உதியஞ்சேரலாதற்கு மகனுமாறில்லை, மருகனேயாவனெனத் தெளிகின்றோம். அதுவேபோல், 9-ஆம் பதிகத்தாலும் இளஞ்சேரலிரும்பொறை வேள்—மையூர்கிழானுக்கும் அவன்தேவி அந்துவஞ்செள்ளைக்கும் மைந்தனாய், குட்டுவன் இரும்பொறைக்கு மருகனேயாவனென அறிகின்றோம் "குட்டுவன் இரும்பொறை—குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையின் மாமன்" என்று மஹாமஹோபாத்தியாய பிரும்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் பதிற்றுப்பத்தின் அரும்பத முதலியவற்றின் அகராதியிற் காட்டியிருப்பதும் இதனை வலியுறுத்தும்.

## (iii) ௬-ஆம் பதிகத்தொடர்ப் பொருட்குறிப்பு.

இனி மூன்றும்பதிகத்தைப்பற்றிய தொல்லையில்லை. அப்பதிகத் தலைவனான பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பதிக ஆசிரியர் வாளா 'இமையவரம்பன்தம்பி' என்றே சுட்டியமைவதனால், அவன், தன் தமையன் 2-ஆம் பதிகத்தலைவனான நெடுஞ்சேரலாதனைப்போலவே, வேள் வெளியனுக்குத் தயனும் உதியஞ்சேரலாதற்கு மருகனும் ஆவ னென்பது எளிதறியக் கிடைப்பதாகும்.

## (iv) எ-ஆம் பதிகத்தொடர்ப் பொருட்குறிப்பு.

ஏழாம்பதிகத்தொடரோ, நெடுங்கால இருளகற்றிச் சேரர்குடித் தாயவழி யுண்மைமுறையைத் துலக்கும் ஒளிவிளக்காயிருக்கிறது. இவ்வுண்மையறிதற்கு இது மிகவும் துணையாவதாய்த் தோன்றுவ தால், இதனைச் சிறிது ஊன்றி ஆராயவேண்டுவது மிகவும் அவசியம். இக்கிளைமுறை விளக்கும் தொடராவது:—"அந்துவற்கு ஒருதந்தை யீன்றமகள்—பொறையன்பெருந்தேவி—யீன்றமகன்" என்பதே. இதிற் பாட்டுடைத்தலைவனான செல்வக்கடுங்கோவை ஈன்ற தாயைப் 'பொறையன்பெருந்தேவி' யெனவும், 'அந்துவற்கு ஒருதந்தையீன்ற மகள்' எனவும் இப்பதிக ஆசிரியர் தெளிவித்துள்ளார். இவர் கபிலர் எனவே கொண்டால், கபிலர் பொய்யாநாவிற் புலவராதலால் அவர் கூறுவது மெய்யென்பது ஒருதலை. யாவர்கூற்றாயினும் இத்தொடர் கூறும் பொருளைத் தெளியமுயல்வோம்.

முதலில், இத்தொடரில் அந்துவனும் கடுங்கோவின் அன்னை யும் ஒருதந்தையீன்றமக்களென்பது துளக்கமற விளக்கப்படுகிறது. அதனால் அந்துவஞ்சேரற்கு அவள் சோதரியாவளென்று அறிகின் றோம். அதுவுமன்றி, அவள் அடுத்து உடனே பொறையன்தேவி எனவும் விதந்து விசேடிக்கப்படுகிறாள். அதனாலும் முற்கூறிய அந்துவற்கு அவள் மனைவியாமாறில்லை. இத்தொடரிறுதியில் இவ ளீன்ற கடுங்கோ அந்துவற்கு மகனெனவும் சுட்டப்படுகிறான். இந் நிலையில் இவள் அந்துவற்கு மைந்தனீன்றுதருவது எப்படி? பொறை யனுக்கு மனைவியாதலாலும், அந்துவனின் தந்தைக்கு மகளாகவே— அந்துவனுக்கு இவள் சோதரியாவதாலும், இவள் அவனை மணந்து

மகப்பெற முடியாது. மணவாக்காதலனாக அவனைக் கூடிக் கடுங் கோவையீன்றாளென்றால், அது அவளையும் அவள் குடியையும் சுடும் பழியாவதல்லால், சேரர்குலம் தழைப அவள் மகனீன்று தந்தாளென நன்மக்களாற் புகழத்தகுதியன்றாம். அவள் பெற்ற கடுங் கோவை அந்துவற்குத் தநயனாக்குவதால் அவனுக்குச் சகோதரனுடன் விபசாரதோஷம் சம்பவிக்கும். இத்துணை விபரீதம் விளைக் கும் இக்கருத்தைவிட்டு, வேறு செம்பொருள் உண்டாயின் அதைக் கொள்ளுவதே நமது கடமையாகும்.

இவ்வாக்கியத்தில் வந்துள்ள விசேடணச்சொற்களின் நிலையும் அமைப்பும் விபரீதப்பொருளுக்குச் சிறிதும் இடமின்றி உண் மையை எளிதில் தெளிவிக்கின்றன. முதலிற் கடுங்கோவின் தாயை அந்துவனின் தங்கைமகளென்று கூறியதோடமையாமல், மீண்டும் அவளைப் பொறையன்தேவி என இடைத்தொடர்கொடுத்தும் விசே டித்திருப்பதாற் புலவர்கருத்துச் சந்தேகவிபரீதங்களுக்குச் சிறிதும் இடந்தராமல் விளங்குகிறது. அந்துவனின் சோதரியும் பொறைய னின் மனைவியுமான சோமாட்டி கடுங்கோவைப் பெறுகின்றாள். அவள்பெற்ற கடுங்கோவே, பொறையனுக்குத் தநயனும், அந்துவற் குப் பிறங்கடையாம் மருமானு மாகின்றான். தெளிவான இத்தொடர் மொழிப்பொருளை மாற்றிக் கடுங்கோவை அந்துவனுக்கு மக னெனவே கொள்ளப்புகின், "ஒருவனே மற்றொருவனுக்கு ஒருங்கே மகனும் மருகனும் ஆவன்" என ஒரு அபூக அசம்பாவித விபரீ தத்தைக் கூறுவதாகமுடியும்.

எப்படியும் இத்தொடரில் 'தேவி' என்பதற்கு மகளெனப் பொருள்கொண்டு இவளைப் பொறையனுக்கு மகளாக்க இடமில்லை. தமிழ்வழக்கில் 'தேவி'ச்சொல் முறைப்பெயராக "புதல்வி"ப் பொரு ளில் ஆட்சிபெறாது-என்பதை மேலே (7,8-ஆம் பக்கம் ௩-ஆம் பகுதி, 1-ஆவது உட்பிரிவில்) காட்டியுள்ளேன். "இவள் தந்தை பொறையனல்லன்; பொறையன்தேவியான இவளுக்குப் பொறைய னல்லாத வேறு ஒரு தந்தை உண்டு" என்றே பதிற்றுப்பத்துப் பழையஉரைகாரரும் பதிப்பாசிரியர் மஹாமஹோபாத்தியாய சாமி நாதையரவர்களும் கருதுகிறார்கள். இதனை, 'ஒருதந்தை—பொறை யன்தேவியின்பிதா' என்ற அவர்கள் உரைக்குறிப்பு விளக்குகின்றது.

'பொறையன்பெருந்தேவி' எனும் தொடர்கொண்டு பொறையனை இவளுக்குத் தந்தை எனக் கொள்ளக்கூடுமாயின், 'ஒரு தந்தை' என்றதற்குப் "பொறையனாகிய ஒருதந்தை" என்று இவர்கள் பொருள்கூறியிருக்கவேண்டும். அதைவிட்டுப் 'பொறையன்தேவியின்பிதா' என்று பொருளுரைக்கமாட்டார்கள். அவ்வாறு இவர்கள் பொருள்கொண்டிருப்பதால், 'தேவி' என்றசொல்லுக்கு மகள் என்னும் பொருள் இவர்களுக்கு ஒவ்வாமையும், மனைவி என்றபொருளே இவர்களுக்கு உடன்பாடும் ஆவதனை அறிகின்றோம். ஆகவே, கடுங்கோவின்தாய், வேண்மான் பொறையனுக்கு மனைவியும், அந்துவன் தந்தைக்கு மகளுமே ஆவளென இப்பதிகத்தொடரால் தெளிகிறோம்.

அன்றியும், இத்தகைய ஐயம் எதுவுமே நிகழாவண்ணம் நிறுத்த சொற்பெய்து புலவர் இதன் மெய்ப்பொருளை விளக்கிவைத்திருக்கிறார். அந்துவன்தந்தைக்குக் கடுங்கோவின்தாய் மகள் என முதலிற் கூறினார். 'மகள்' எனும் சொல்லுக்கு மனைவி, பெண், தநயை எனப் பலபொருள் உண்மையால், பிற பொருந்தாப்பொருள்களை விலக்கி இவள் அவனுக்குத் தநயை என்பதைத் தெளிவிப்பதற்கு மகளுக்கு முன் 'ஒருதந்தையீன்ற' என்ற அடைகொடுத்தார். எனவே இவள் அந்துவன்தந்தைக்கு மனைவியல்லள், அவன்பெற்ற தநயையேயாவள்-என்பது மலையிலக்காகிறது.

இனி, மகட்சொற்போலவே, தமிழில் மகன் எனு மொழியும் ஆண்மகன், கணவன், வழித்தோன்றலாம் மருமான், புதல்வன் எனப் பலபொருள்களில் வரும். ஆதலால் இத்தொடரிறுதியில் 'பொறையன் பெருந்தேவி யீன்றமகன்' என்றவிடத்தில் 'மகன்' என்றசொல்லுக்குப் பொருளென்னை? இவ்விடத் திச்சொல்லின் பொருத்தமென்ன?—என்பன சிந்திக்கத்தக்கனவாம். அந்துவன்பெற்ற புதல்வியாய்ப் பொறையனை மணந்த தேவியீன்ற கடுங்கோ, தன் தாயை மணந்த பொறையனுக்குப் புதல்வனும், தன் மாதுலனான அந்துவனுக்கு வழித்தோன்றலான மருமானுமாவன். இவ்விரியையும் விளக்க மகன் என்னு மொருசொல்லே அமைவுடையதாதலின், இப்பதிகப்புலவர் ஈண்டு அச்சொல்லைப் பெய்துவைத்தார். இதனை இக்கட்டுரையின் இறுதிப்பகுதியில் விசதமாக ஆராய்வதால் ஈண்டு விரியா திம்மட்டில் நிறுத்துகின்றேன்.

அப்படியே இவள்பெற்ற மகன் அந்துவற்குத் தநயனல்லன், மருகனேயாவனென்று தெளிவிப்பதற்காகப் புலவர் மீண்டும் இவளைப் 'பொறையன்தேவி' என்று விசேடித்து, 'ஒருதந்தை யீன்ற மகள்' என்பதற்கும்- (இவள்) 'ஈன்றமகன்' என்பதற்கும் இடையே விசேடணம் (அடை)கொடுத்துப் பிரித்து நிறுத்துகின்றார். இவ்வாறு அந்துவன், பொறையன், கடுங்கோ ஆகிய மூவருக்கும் இவளுக்கும் உள்ள முறை நிரல்நிறையே தெளிக்கப்படுகின்றது. இவள் முதல்வனுக்குச் சோதரி, நடுவனுக்கு மனைவி, கடையனுக்குத் தாய் என்பது வெள்ளிடைமலையாம். எப்படியும் இத்தொடரால் அந்துவனுக்குக் கடுங்கோவின்தாய் மனைவியாதல் இயலாதென்பது ஒருதலை; எனவே, அவனுக்கு இவன் தநயனுகான், வழித்தோன்றலான மருமானேயாக வேண்டுமென்பது தெளியக்கிடக்கின்றது. மருமக்கட்டாயத்தைச் சுட்டுஞ் சான்று இதைவிட வேறு எப்படிக் காணமுடியும். இத்தொடர் மக்கட்டாயத்தொடமைவுபெற மறுக்கின்றது. கடுங்கோவை அந்துவனுக்கு மகன் என்றுகொள்ள இத்தொடர் எவ்வாற்றானும் இடந்தரவில்லை: மருகனெனும் ஒருபொருளே இத்தொடருக்கு ஒருதலையாய் அமைந்த பொருளென்பதை இத்தொடர்மொழிகள் நின்று பறையடிக்கின்றன. இப்பொருளிற் பிறபதிகத்தொடர்களெல்லாம் இதனேடு பொருந்தக் காண்பாம். பிறிது பொருட்கு இப்பதிகம் இடந்தராது. இந்நிலையில் இவையெல்லாம் ஒருங்கு நின்று தெளிவிப்பது மருமக்கட்டாயமன்றி மக்கட்டாயமன்றென்று விளக்கமாகும்.

(v) ரு-ஆம் பதிகத்தொடர்ப் பொருட்குறிப்பு.

(1) இனி, எஞ்சிநிற்கும் 5-ஆம் பதிகமொன்று ஆராயக்கிடக்கின்றது. அதன்பொருளையும் ஒருவாறு அளந்தறிய முயலுவோம். இதில் கிளைகிளத்தும் தொடர் "நெடுஞ்சேரலாதற்கு, சோழன்மணக்கிள்ளியீன்ற மகன்" என்று நிற்கிறது. இதில் நிரப்பவேண்டிய சொற்குறையுண்மை புலப்படுகிறது. நிற்கிறபடி இச்சொற்றொடரில் பொருத்தமும் பொருளும் இல்லை.

(2) இதுவரையில், இப்பதிகத்தலைவனை செங்குட்டுவனை நெடுஞ்சேரலாதற்கும் சோழன்மகள் மணக்கிள்ளிக்கும் பிறந்த மகனென்று இத்தொடர் குறிப்பதாகப் பலரும் கொண்டமைந்தனர்.

அதாவது:-செங்குட்டுவனுக்குச் சேரல் ஆதனைத் தந்தையும் சோழன் மணக்கிள்ளியைத் தாயுமாகக் கருதிவந்தனர். இம்முறைக்கு வேறு ஆதாரமிருந்தால் அதைக் கண்டபோது விசாரிப்போம். இதுவரையும் பலரும் இத்தொடரொன்றையே இதற்கு ஆதாரவாக எடுத்தாளப் பார்க்கின்றோம். இத்தொடர் இப்பொருள் தருமாறில்லையென்பதுமட்டும் இதைச் சிந்திக்கப்புகுந்தவுடன் தெளிவாகிறது.

(3) இப்போது நிற்குநிலையில் இத்தொடரில் செங்குட்டுவன் தாய் (பெயர்) குறிக்கப்படவில்லை. 'சோழன்மணக்கிள்ளி' ஆண்பாற் பெயர்; அதனால் செங்குட்டுவனின் தாய்பெயராகமாட்டாது. மணக்கிள்ளி என்பது அவன் தாயின் இயற்பெயராகவும், அவளை ஒரு சோழன்மகளாகவும் சிலர் கருதுவர். மணக்கிள்ளி என்னும் சொல் ஒருபெண்பாற்பெயராய் யாண்டும் வழங்கக்காணற்கில்லை. அதற்கு மாறாகப் பலவிடத்தும் கிள்ளி என்பது ஆண்பாற்பெயராய்ச் சோழமன்னர்பலருக்குரிய சிறப்புப்பெயராய் வழங்கிவருவது பிரசித்தம். 'வெண்வேற்கிள்ளி', 'நெடுங்கிள்ளி', 'கழற்கிள்ளி', 'நெடுமுடிக்கிள்ளி', வடிவேற்கிள்ளி', 'இளங்கிள்ளி', 'மாவண்கிள்ளி' எனப் பலபெயருடைய சோழவேந்தரைச்சுட்டும் பாட்டுக்கள் சங்கநூல்களிற் பல காணலாம். இப்படிச் சிலமன்னரின் சிறப்புடைப்பெயராவதுமன்றி, சோழர்குடியரசருக்கே இது நிலைத்த ஒரு பொதுப்பெயராகவும் துலங்குகிறது திவாகரத்தில், கோச்சோழன்பெயர்—"சென்னி, வளவன், கிள்ளி, செம்பியன்" என்று சேந்தனார் கூறிப்போவதனால், இச்சொல் சோழமன்னர் பொதுப்பெயராதல் தெளியப்படும். ஆகவே இப்பதிகத்தொடரில் "மணக்கிள்ளி" யென்பது, யாதொரு பெண்ணையும் குறியாமல் சோழன்பெயராகவே நிற்பதெனக்கொள்ளுதலே முறைமையாகும்.

(4) பின்னும் மற்றைப் பதிகங்களிலெல்லாம் பாட்டுடைத் தலைவரின் தாய்மார்பெயர் சுட்டினும் சுட்டாவிடினும், அவ்வவரின் தந்தையர்பெயர் தவறுமற் சுட்டப்படுவது கவனிக்கத்தக்கது. அதன் சிறப்புக்காரணத்தைப் பின்னர் விசாரிப்போம் * இவ்விடத்தில் மற்றப்பதிகப்போக்குக்கு மாறாக 5-ஆம் பதிகத்தில்மட்டும் தந்தை

---

* ச—ஆம் பகுதி 4-ஆவது உட்பிரிவில் காண்க.

பெயரைச்சுட்டாமல்விடவும், தாயைமட்டும் மணக்கிள்ளியென விதந்துகூறவும் தனிக்காரணம் ஒன்றுமில்லை. பதிகங்களெல்லாம் ஒரே ஆசிரியர் செய்தனவென்றே ஆராய்ச்சியாளரனைவரும் ஊகிக்கின்றனர். இப்பதிகப்புலவர் பிற இடங்களிலெல்லாம் தாம் கொண்ட முறையை இங்குமட்டும் கைவிடக்கருதுவானேன்? அவர் நன்றென யாண்டும் கையாண்ட ஒருதுறையை நெகிழாமல் இப்பதிகத்திலும் பின்பற்றியதாகக் கொள்வதே முறையாகும்.

மற்றெல்லாப் பதிகங்களிலும் பாட்டுடைத்தலைவரின் தந்தையர்க்குரிய இயற்பெயரும் சிறப்புப்பெயரும் ஒருங்கே கூறப்படுகின்றன. அதுபோல் இதிலும் கூறப்பட்டிருக்கவேண்டுமெனக்கொள்ளுவது நியாயமாகும். அம்முறையிற் சோழன் என்ற சிறப்புப்பெயரின் பின் மணக்கிள்ளி என்று அவன் இயற்பெயர் சொல்லப்படுவது அவசியமும் பொருத்தமுமாகும்.

(5) இன்னும் அடியார்க்குநல்லாரும் பிறரும் செங்குட்டுவன் தாய்பெயர் நற்சோணை என விதந்துகூறுகின்றனர். யாண்டும் அவர் மணக்கிள்ளி என்பது அவள்பெயரெனச் சுட்டவில்லை. இவை பலவற்றாலும் ஈண்டு மணக்கிள்ளி யென்பது செங்குட்டுவன் தந்தை பெயராகவேண்டுமென்பதே நிலைபெறுகிறது.

(6) ஆனால் சோழன்மணக்கிள்ளி சேரலாதற்குத் தானே மகப்பெறமாட்டான். ஐயனைப்பெறுவிக்கும் ஹரிஹரக்கூட்டம் மக்கட்கில்லை. பெண்ணின்றி இருபுருடர் தம்மளவில் புத்திரப்பேறெய்தற்கில்லை. அதனால், செங்குட்டுவனை ஈன்றதாயைச் சுட்டுஞ்சொல்லொன்று இத்தொடரில் இருக்கவேண்டுவது அவசியம்.

(7) இனி, மணக்கிள்ளியைப் பெண்பெயராகவே கொள்வதானாலுங்கூட அப்பெயருடைப்பெண்ணுக்கும் சோழனுக்கும் உள்ள முறை குறிக்குஞ்சொல்லெதுவும் இல்லாததால் இத்தொடருக்குப் பொருளில்லாதாகிவிடும். இருவேறுபாலா ரிருவரியற்பெயர்களின் வெறும் தொடையால் அவர்களின் முறையியைபு தெளியுமாறில்லை. ஆகையால் எப்போதும் அப்பெயர்த்தொடர்கள் தம்மிடை இயை

புடைய முறைப்பெயரைப் பெறினல்லாற் பொருள்தராவாம். அதனு லும் இங்கு ஒரு சொற்குறைவு தெளியப்படும். *

* "'சேரலாதற்குச் சோழன் மணக்கிள்ளி யீன்றமகன்' என்ற இச் சொற்றொடர் நின்றபடியே நல்லபொருளமைவுடைத்து. பொருட்குறை நிறைப்பதற்காக யாதொருசொல்லும் இங்குப் பெய்துகூட்டற்கவசியமில்லை" என்று, இவ்வாராய்ச்சிக் கட்டுரைக்குப் பண்டிதர் திரு. மு. இராகவையங்கார் அவர்கள் எழுதிவெளியிட்ட கண்டனத்தை மறுத்து (செந்தமிழ்த் தொகுதி உஅ பக். உஎஎ-ஙஉகல்) மதுரை உயர்நீதிமன்றவழக்குவல்லார் திரு. கிருஷ்ண சாமி பாரதியார் தாம்வெளியிட்ட மறுப்புரையில், விளக்கிப்போந்தனர். ஒருவாறு இதிற்சிறிதுண்மையுண்டுதான். "'நெடுஞ்சேரலாதற்குச் சோழன் மணக்கிள்ளி யீன்றமகன்' எனுந்தொடர் நின்றபடியே நல்லபொருள்தரக்கூடியதேயாம். செங்குட்டுவனைப்பெற்ற தாயைக் குறிக்குஞ்சொற்பெய லின்றியமையாததன்று" என்றும், "'அவ்வரசன் தந்தை சோழன்மணக்கிள்ளி தனக்கு மகனாகவும்—சேரலாதற்கு வாரிசான மருமானாகவும்—செங்குட்டுவனை ஈன்றுதவினன்' என் றித்தொடரே விசதமாக்குவதாலும் செங்குட்டுவனையீன்ற சோழன் மணக்கிள்ளி எவ்வாற்றானும் சேரலாதற்கு மனைவியாதல் கூடா தென்பது வெளிப்படையாதலாலும் மக்கட்டாயத்தை மறுத்து மருமக்கட் டாயத்தை வலியுறுத்த இப்பதிகத் தொடரே ஏனைய பதிகத் தொடர்களை விட மிகவு முபகாரப்படுகிறநிலையில், இத்தொடரில் 'தேவி' 'வேண்மாள்' என்ற மனைவிப்பொருள் குறிக்கும் சொல்லொன்றைச் 'சோழன் மணக் கிள்ளி' என்பதை யடுத்துப் பெய்தமைக்கவேண்டாவாய" என்றும், அம்மறுப் புரைகாரர் கருதுவதில் பொருத்தமும் பொருளுமிருக்கிறதென்பதில் ஐய மில்லை. எனினும், பிறபதிகங்களிலெல்லாம் கோச்சேரர் குடிப்பிறந்து, பிற குறுமன்னரை மணந்து, சேரமன்னருக்கு அவர் பழங்குடி தழைய வழித் தோன்றலாம் மருமான்மாரை யீன்றுதவும் தாய்மாரை ஒருபடியே சுட்டி, தந்தையொடு தாய்மாரையும் புலவர் விதந்து பாடியிருக்கும் மரபை இப்பதிகத் தில்மட்டும் நெகிழவிட்டுச் செங்குட்டுவனுக்குத் தாயைச்சுட்டாது தந்தை சோழன்மணக்கிள்ளியைமட்டும் குறித்தார் என்று கொள்ளப் போதிய ஆதார மில்லை. மேலும், நற்சோணை என்பாள் செங்குட்டுவன்தாயென அடியார்க்கு நல்லாரும், அவளை 'ஞாயிற்றுச்சோழன்மகள்' என இளங்கோவும் கூறுவ தாலும் ஆண்டு 'மகள்' என்பது மனைவிப்பொருட்டென்பதை இக்கட்டுரை யில் கீழே ௩-ஆம் பகுதி vi-ஆவது உட்பகுதியில் விசதமாக்கியிருப்பதாலும், பதிற்றுப்பத்தின்மற்றெல்லாப்பதிகத்தொடர்களுடனவைவுபட இவ்விடத்து மமைவதாகக்கோடலே சால்புடைத்தெனக்கருதி நான் இத்தொடரிலும் மனைவிமுறைகுறிக்கும் தேவிச்சொல்போன்றதோர் சொற்குறையுண் டெனவேகொண்டு அதைப் பெய்தமைப்பதே முறையெனக்கருதுகிறேன்.

(8) மேலும் 4,6, 7, 8 பதிகங்களில் தேவி என்றும், 2, 9 பதிகங்களில் வேண்மாள் என்றும் முறைப்பெயர்கள் நின்றே அத்தொடர்கள் பொருள்பயத்தலால், அங்ஙனமே இவ்விடத்தும் அவை போன்றதொரு முறைப்பெயர்ச்சொல் இன்றியமையாததாகும். அதுவும் மற்றைப்பதிகங்களில்வந்தமைந்த முறைப்பெயர்ச்சொற் பொருளுடையதாக இருத்தலே பொருத்தமாகும். எனவே, அது வேண்மாள், தேவி என்பவற்றுள் ஒன்றாகக்கொள்ளுவது தவறாகாது. 'தேவி' என்றசொல் மணக்கிள்ளிக்கு முன் அல்லது பின் நிற்கவேண்டும். முன்வைப்பின் மணக்கிள்ளிச்சொல் பொருளின்றி நின்றுவற்றும் அது பெண்பெயராகாமையையும் சோழன்பெயராகவேண்டுமென்பதையும் மேலேதெளிந்தோம். ஆதலால், தேவி போல்வதொரு முறைப்பெயர் "மணக்கிள்ளி" என்பதன்பின்னும், "ஈன்றமகன்" என்பதற்கு முன்னும் நிற்பதுவே அமைவுடைத்தாம்.

அத்தகைய குறைநிரப்புஞ்சொற் பெய்து பாடங்கொள்ளின் இப்பதிகத்தொடர் தெளிவுபெற்றுச் சிறப்பதாகும். ஆகையினாலே இவ்விடத்தில் "சேரலாதற்கு, சோழன் மணக்கிள்ளிதேவி ஈன்றமகன்" என்பதுபோன்றதொரு பாடம் கொள்வது அவசியமும் அழகுமாகும். இனையதொருசொல் நிரப்பப்பெறாதவரை இத்தொடருக்கு எப்பொருளும் தெளிதற்கில்லை. பெய்தமைத்தால் அது பொருந்தும்பொருள்தந்து சிறந்துநிற்கும். எனவே, இப்பதிகத்தொடரால், செங்குட்டுவன் சோழனுக்குத் தநயனும் சேரலாதற்கு மருகனும் ஆவனெனத் தெளியலாகும்.

## (vi) மகட்சொல்லின் பொருள்விளக்கம்.

(a) இந்தப்பகுதியை முடிக்குமுன்னே இங்கு நாம் கருதவேண்டிய பிறிதொரு செய்தியுண்டு. செங்குட்டுவனுக்குச் சேரத்தந்தையும் சோழத்தாயும் தருபவர் தமதுகொள்கைக்கு ஆதாரமாக எடுத்துக்காட்டும் மேற்கோள்வாக்கியம் ஒன்றுண்டு. சிலப்பதிகாரப் பாயிரவுரையில், "சேரலாதற்கு......சோழன்றன்மகள் நற்சோணையீன்ற மக்களிருவருள் முன்னோன்" எனச் செங்குட்டுவனை அடியார்க்குநல்லார் குறிக்கின்றார். இதிற் குறிக்கும் செய்திக்கு அவ்வுரையாசிரியர் கண்ட ஆதரவை அவர் விளக்கினாரில்லை; என்றாலும்,

அவருரையின் இத்தொடரை ஆதாரமாக்கி, சேரலாதற்குச் செங் குட்டுவன் தநயனெனவும், அவன்தாய் சோழன்மகளெனவும் சிலர் கருதுகின்றனர். இவர்கொள்கைக்கு ஆதாரமாய்க் காட்டக்கூடிய இதனினும் சிறந்த ஒரு சொற்றொடரும் நான் காணுகின்றேன். இளங்கோவடிகளே தம் நாடகக்காப்பியத்தில் "திகழொளிஞாயிற் றுச் சோழன்மகளீன்றமைந்தன்............செங்குட்டுவன்"* என்று கூறுகின்றார். அடிகளைவிட அவர்குலமுறையைத் தெளிவிக்கப் பிறர் யாரும் அருகரில்லை. அவர்வாக்கியத்தை எடுத்தெறிய அதிகாரம் எவர்க்குமில்லை. ஆகவே இவ்வாக்கியத்தால் அவருக்கும் அவர்தமை யன் செங்குட்டுவனுக்கும் தாயாவாள் சோழன்தநயை என்றே ஏற் படுமானால், இதை ஒப்புக்கொண்டு பதிற்றுப்பத்துப் பதிகப்பாக் களின் ஆதாரவைக்கூடப் புறக்கணிக்கவேண்டிவரும். ஏனெனில், அப்பதிகப்பாவலர் சேரர்குலத்துக்கு அந்நியர். அடிகளோ, அக் குடியிற் பிறந்து சிறந்த பெருந்தகையாராவதோடு, செங்குட்டுவ னுக்கு உடன்பிறந்த தம்பியுமாவர். அதனால் இது சம்பந்தமாக அவர்கூற்றே ஏற்றபெற்றியதாகும். இவருடைய இவ்வாக்கியமே அடியார்க்குநல்லாருரைத்தொடருக்கும் ஆதாரவாயிருக்கலாமெனவும் தோன்றுகிறது. ஆதலால் இத்தொடர்களின் பொருளை ஊன்றி ஆராயவேண்டுவது மிகவும் அவசியமேயாம்.

(b) அடிகளின் மூலவாக்கியத்திலும் அடியார்க்குநல்லாரின் உரைத்தொடரிலும் வருகின்ற 'மகள்' எனும் சொல் தநயைப்பொரு ளிலேயே நிற்குமாயின், இதுவரை நாம்செய்த ஆராய்ச்சியெல்லாம் விழல்நீராகும். அதற்கஞ்சி, அச்சொல்லுக்கு அப்பொருளே அமையு மாயின் அதைக்கொள்ளப் பின்னிடையும்பெற்றியில்லை. பதிற்றுப் பத்துப் பதிகத்தொடர்கள் ஈண்டு மகட்சொல்லைத் தநயை எனக் கொள்ளற்கு இடந்தருமாயின், சங்கையின்றிச் சேரருக்கு மக்கட் டாயமேயுள்ளதெனக் கொள்ளல்கூடும். பதிகங்களோ மருமக்கட் டாயத்தையே சுட்டுகின்றன. 7-ஆம் பதிகத்தொடர் அறவே மக்கட் டாயத்தை மறுத்து மற்றதனையே வலியுறுத்துகின்றது. இவற்றை

* வாழ்த்துக்காதை. உரைப்பாட்டுமடை. வரி–2, 3.

யெல்லாம் மேலே விசாரித்தோம். பதிகம்பாடிய பழம்புலவர் பிழைத்தனரென்று அவர்பாக்களை எளிதிற் கழித்தற்கில்லை. என்றாலும் இளங்கோவடிகளின் சொற்றொடர் மக்கட்டாயத்தை மட்டுமே சுட்டுமாயின், அவரையே தழுவிப் பதிகப்பாவலரை நழுவவிடவேண்டிவரும். ஆனால், அப்படி நழுவவிடுமுன், அவர் பதிகத்தொடரும் இளங்கோவடிகள் சொற்றொடரும் தம்முள் மாறுபடாமல் நின்றமையும் பொருளமைதி பெறக்கூடுமா என்று விசாரிப்பது நமது முதற்கடமை. "பெரும்புலவர் சொல்லாற்றல் மெய்ம்மை பிறழாமற்காக்கும்" என்னும் மரபுண்மையை மறவாமல், முதலில் இவற்றை அமைத்துக்கொள்ளும் முயற்சியை நாம் மேற் கொள்வதே முறையாகும். எவ்வாற்றானும் அமைதிபெற வழி காணாதவரை, இவற்றுட் சிறந்ததுகொண்டு பிறவற்றைக் கழிப்பது இழுக்காகாது. இம்முறையை இங்கு நாம் மேற்கொண்டு, அடிக ளுடையவும், அவரைப்பற்றியெழும் அடியார்க்குநல்லாருடையவு மான சொற்றொடர்களைச் சிறிது ஊன்றி ஆராயப்புகுவோம்.

(c) இந்நெருக்கடியில், இவ்வாராய்ச்சிக்கு உதவியாக, எதிர் பாராத இடத்திலிருந்து நமது ஐய இருளகற்றவரும் விளக்கத்தைப் பெறுகின்றோம். சங்கப்புலவரான சாத்தனார், செங்குட்டுவன்-இளங் கோவடிகள் இருவருக்கும் சமகாலத்தவர்; அதுமட்டுமில்லை. அவ் விருவர்பழக்கமும் நட்பும் பெற்றவராவர். மாபத்தினியின் மறக்கற் பால் மதுரை அழலுண்டழிந்தபிறகு இவர் சேரநாடுசென்று வஞ்சி யிற் கோச்சேரன்வண்மையும் இளங்கோவின் மதிப்பும் பெற்று வாழ்ந்துவந்தார். அக்காலத்தில் இவர் மணிமேகலைநூலை இளங் கோவுக்குப் பாடிக்காட்டியும், அடிகளின் சிலப்பதிகாரத்தை அவர் பாடக்கேட்டும், ஒருவர்நூலையொருவர் பாராட்டியதாகத் தெரிகின் றோம். அடிகளின் அங்கீகாரச்சிறப்புடைய மணிமேகலையுள் "மகன்" எனும்சொல் "மனைவி" எனும் பொருளில் வழங்கப் பார்க்கின்றோம்.

"நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம்
மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்
பண்டும் பண்டும் பலபிறப் புளவால்"

(மணிமேகலை. காதை-22. வரி 29-31.)

எனும் அடிகளிற் சாத்தனார் மணிமேகலையும் உதயகுமாரனும் பலமுற் பிறப்புக்களிற் சதிபதிகளாகவாழ்ந்த விவரத்தைவிளக்குகின்றார். இவ் வடிகளில் 'மகள்' என்பது மனைவியையேசுட்டிநிற்பது வெளிப்படை. மஹாமஹோபாத்தியாய சாமிநாதையரவர்களும் இவ்வடிகளுக்குத் தாமெழுதிய குறிப்புரையில் 'மகள்' என்பதற்கு 'மனைவி' யென்றே பொருள்வரைந்துள்ளார்கள். இதனால் மகட்சொல்லுக்கு மனைவிப் பொருள் வழக்குண்டென்பது தெளியப்படுகிறது. இன்னும் "கண வன்"—'மனைவி" யெனும்பொருளில் "மகன்"—"மகள்" என்ற சொற் கள் வருமென்பதை, 'கோதக வுண்டோ நம்மக னார்க்கினி'* என இளங்கோவும் கூறுதலாலும், செய்யுளிலும் வழக்கிலும் 'மணமகன்'— 'மணமகள்' என்ற பிரயோகங்கள் அடிப்பட்ட ஆட்சிபெறுதலாலும், நன்கறியலாம். ஆகவே, 'மகள்' எனுஞ்சொல் 'மனைவி' யெனும் பொருளில் வருவது அருமையில்லை, ஆன்றசான்றோராட்சியும் தமிழ் நன்மக்களிடை நெடுவழக்கு முடையதென்றே தெரிகின்றது.

(d) இப்பொருளில் அடிகள்வாக்கும் அடியார்க்குநல்லார் உரைத் தொடரும் பதிற்றுப்பத்துப்பாக்களோடு எவ்விதப் பிணக்குமின்றிப் பொருந்தியமைகின்றன. "சோழன்மகள்" என்பதற்குச் "சோழன் மனைவி" யென்று பொருள்கொண்டால், சோழனுக்கு அவன் தேவி யீன்றமக்கள் சேரனுக்குத் தாயராகார், மருகரேயாவரென்பது விசத மாகும். எனவே "சேரலாதற்குச் சோழன்மகள் ஈன்றமகன் செங் குட்டுவன்" என்ற பிரயோகத்தைமட்டும்வைத்துச் சேரலாதற்குச் செங்குட்டுவனை நேரே தநயனாகவும், சோழனுக்கு அவனை மகள்பிள்ளை யெனாகவும் கொண்டுதீரவேண்டிய அவசியமேற்படவில்லை. எனவே, சிலப்பதிகாரத்தில்வரும் இம்மகட்சொற்பிரயோகம் பதிற்றுப்பத்துப் பதிகக்குறிப்புக்களோடு முரணுவதாகக் கொள்ளவேண்டா. இப் பதிகத்தொடர்கள் சேரர்குடியில் ஒருதலையாக மருகர் அல்லது வழித் தோன்றல்களையே சுட்டுவனவாகவும், அப்பதிகத்தலைவர் சேரமன்ன னுக்குத் தநயராகார் மருகரேயாவாரென விளக்குவனவாகவும், தாமே தெளியத் தெரிக்கின்றன. சிலப்பதிகாரப் பிரயோகங்களும் இத் தாயமுறையைத்தழுவி அமைவனவாகக்காண்கின்றோம்.

* சிலப்பதிகாரம் - கொலைக்களக்காதை—வரி-17.

## (vii) மற்றுமோ ரையமகற்றல்.

இனி, 'நுந்தை தாணிழ லிருந்தோய் நின்னை' என்று வருந்தரு காதையில் இளங்கோவும், 'நிமித்திகன்........சேர்தி நீயெனச் சேரலற் குரைத்தவன் மைந்தரைநோக்கி நந்தாச்செங்கோ லந்தமிலின்பத் தரசாளுரிமை யிளையோற்குண்டென' என்று பதிகவுரையில் அடியார்க்குநல்லாரும், இமையவரம்பனையும் செங்குட்டுவன் இளங்கோ என்பாரையும் முறையே 'நுந்தை,' 'மைந்தர்' எனச் சுட்டிக் கூறியதைக்கொண்டு, இவர்கள் அவனுக்குப் புதல்வராகவேண்டும் எனச் சிலர் வாதிக்கவரலாம். ஆனால், இவ்வாராய்ச்சியில் எவ்வித முடிபையும் இச்சொற்களைக்கொண்டு துணிதற்கில்லை. தந்தை நுந்தை எந்தை என்பன முன்னோன் உன்தலைவன் என்னிறைவன் என்ற பொதுப்பொருளில் மேம்பாட்டுச்சொற்களாயும், 'மைந்தர்' என்பது ஆண்மக்கள் ஆண்சிறுர் என்றுகுறிக்கும் ஒரு பாராட்டுப் பொதுச்சொல்லாயும், சான்றோர்பாட்டுக்களிற் பெருவழக்காய் வருகின்றன. இவை 'பிதா' புதல்வர்' என்ற முறையைமட்டும் யாண்டும் சுட்டிநிற்கும் நியதியுடையனவல்ல. 'எந்தை வாழி ஆதனுங்க' என்று வேங்கடத்து வேள் ஒருவனைப் புலவர் ஆத்திரையனாரும், 'அஃதை தந்தை அண்ணல்யானை அடுபோர்ச்சோழர்' எனப் பிறரும் பாடியதும், இனைய பல பிறவும் கொண்டு, நுந்தைச்சொல்,–உன் இறைவன்–உன் முன்னவன்–என்ற பொருளில் அமையுமெனத் தெளிகின்றோம். 'மாந்தர் மைந்தர் மக்களாண் பொதுப்பெயர்' எனும் திவாகரச் சூத்திரத்தால், மைந்தர்–ஆண்மக்களின் பொதுப்பெயரென்று அறிகின்றோம். ஆகவே, 'நுந்தை' 'மைந்தர்' என்ற சொற்களை வைத்துச் செங்குட்டுவனும் அவன்தம்பி இளங்கோவும் நெடுஞ்சேரலாதற்கு நேரே பெற்ற புதல்வராவரென வரையறுத்து முறைகொள்ள இயலாது. மருமான்மாராய மைந்தருக்கு அவர்தம் குலமுதல்வனை அம்மான்கோவை 'நுந்தை' என்று சுட்டுவது தவறாகாது, தகவுடையதேயாகும். பிதா–புதல்வர் என்று தெளிவாக விதந்துசுட்டும் வேறு பிரயோகம் ஒன்றும் சேரரைப்பற்றிய பழம்பாட்டுக்களில் யாண்டும் இன்மையால், ஈண்டும் அம்முறையை இச்சொற்களால் மட்டும் அமைத்துக்கோடற்கு அவசியமில்லை. ஆகவே, இதுவரைசெய்த இவ்வாராய்ச்சியாற் சேரரை மக்கட்டாயமுடையாராகத் தெளிவிக்கும்

சான்றுகளேதுவுங் கிடையாமையோடு, அவர்மரபினர் மருமக்கட்டாயத்தினரேயாவரென்று ஒருவாறு துணியப் போதிய ஆதாரமும் கண்டோமாவோம்.

## பகுதி ச. பிறசான்றுகள்.

இதுவரையில் பதிகத்தொடர்களின் சொல்லமைப்பையும் ஆற்றலையும் கொண்டு அவற்றைத் தனித்தனியே ஆய்ந்துவந்தோம். இனி இவ்வாராய்ச்சிக்குப் பொதுநின்றுதவும் சிலசெய்திகளையும் துணைக்கொள்கைகள் சிலவற்றையும் இங்கு விசாரிப்போம்.

துணைச்சான்றாய்ச் சேரர் தாய்வழித்தாயமுறை துலக்குஞ் செய்திகளாவன:—

(I) பதிகங்குறிக்கும் சேரர்தாய்மார் பாட்டுக்களில் சுட்டப்பெறாமை.

(1) பதிற்றுப்பத்துப்பாட்டுக்களில், சேரலாதன் களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரல் செங்குட்டுவன் செல்வக்கடுங்கோ வாழியாதன் இரும்பொறை இளஞ்சேரலிரும்பொறை என்ற பாட்டுடைச் சேரவேந்தர்பலர் பெயர்கள் குறிக்கப்படுகின்றன. 'நன்னுதல் கணவ,' 'நல்லோள்கணவ,' 'புரையோள்கணவ,' 'ஒண்டொடிகணவ', 'நின் பேரியலரிவை', 'நின் கற்பின் மாணிழையரிவை', 'வாணுதலரிவையொடுகாண்வர' என்று அவர்பலரை அவரவர்மனைவிமார் கற்புறு காதற்சிறப்பாற் சுட்டியும் அவரைப்பாடிய புலவர் பாராட்டிச்செல்கின்றனர். எனினும் பதிகத்திற் குறிக்கப்பெற்ற வெளியன்வேண்மாள்-நல்லினி, பதுமன்தேவி, சோழன்மகள் நற்சோணை, வேண்மாள்-அந்துவஞ்செள்ளை முதலிய பெண்டிர்யாரும் யாண்டும் எச்சேரருக்கும் மனைவியாகச் சுட்டப்பெறாமை ஈண்டுச் சிந்திக்கத்தகது. இப்பெண்மணிகள் கோச்சேரருக்குரிய பெருந்தேவிமாராயின், அச்சேரரைப்பாடும்புலவர்அவர்பெண்டிரைச்சுட்டிப் பாராட்டும் பல இடங்களில் யாண்டேனும் இப்பெருமாட்டிகளுள் யார்பேரையாவது ஒரு புலவரேனும் சுட்டாமல், எல்லோரையுமே எல்லாப்புலவருமே மறந்துவிட்டு, பிற்குறிப்பாகப் பதிகப்பாட்டுக்களில்மட்டும் இவரை விதந்துகூறுவானேன்? உண்மையில் இப்பெண்மைப்பெருந்தகையார் கோமன்னர்மனைவிமாராயின், பாட்டுடைத்தலைவரின் பெண்டிரைச்

சுட்டி 'இன்னவள்கணவ' என்று விதந்துபாராட்டு மிடங்களிலேனும் பாடும் புலவர் இவர்களை விசதமாகச்சுட்டாமல் விட்டிராரன்றோ? இப் பெண்டிர்யாரும் மூலப்பாட்டுக்களில் யாண்டும் கோச்சேரர்யாருக் கும் மனைவியராகக் குறிக்கப்படாமையாலேயே இவரைச் சேரமன்ன வருக்கு மனைவியராய்க் கருதுவது தவறு என்று தெளியலாகும். இக் கோப்பெண்டிர் சேரருக்குத் தாயரும் சோதரிமாரும் ஆவதன்றி மனைவிமாராகார் என்பதை முன் பதிகப்பாக்களின் ஆராய்ச்சியால் ஒருவாறு துணிந்துகொண்டோம். அத்துணிவை, மூலப்பாட்டுக் களில் இவர்பெயர் துலங்காமல் பாட்டுடைக்கோச்சேரரின் கற்புடை மனைவிமார்பிறரை அப்புலவர் பாராட்டிப்போவது இன்னும் அதிகம் வலியுறுத்துவதாகும்.

(2) மருமக்கட்டாயமுடைய சேரர்குடியில் மனைவிமார்க்குப் பெரும்பதவி யொன்றுமில்லை. அம்மனைவியரின் வயிற்றுமக்களும் சேரர்குடிதாங்கும்பெற்றி பெறுர். வேந்தர்க்குத் தேவியராவதல்லால் மனைவியர்க்குக் கோச்குடியில் வேறுவித உரிமை இல்லை. அரசிய ராம் பதவியொடு குடிதழைய மகப்பேறுபெற்றுதவும் பெருமை கோச்சேரர் சோதரிமார், அவர்வயிற்று மருகியர்கள் இவர்கட்கே உரியதாகும். அதனாற்றான் சேரரைப்பாடும் புலவர், தம் மூலப் பாட்டுக்களில் அவர்மனைவியர்பெயர் விளக்கமுறத் துலக்காமற்பாடிப் போவார். கோவேந்தர்தாய்மாரைச் சுட்டுங்கால், அத்தாயர் கோக் குடியிற் பெண்வழியில் அரசியராய்ப் பதவியுள்ளாராதலாலே பதிகப் பாட்டுக்களில் அவர்பெயர்கள் உறவுமுறை பதவியொடு பெருமை யெல்லாம் விளக்கமுறப் பேசப்பெறுகின்றன.

(3) மருமக்கட்டாயமுடைய பெருங்குடிப்பெண்டிர் ஒத்ததக வுடைய பிறிதுகுடிப்பெரியாரை மணந்து வாழ்வர். அப்பெண்டிர் பெறும் மக்கள் தாய்க்குடியில் மாமன்மார்க்குப் *பிறங்கடைகளாகி நிற்பர். தம் தந்தையர்குடியில் அவர்க்குத் தொடர்புரிமை யாதும் இல்லை. கோச்சேரர்குடிப்பெண்டிர், பெரும்பாலும் அக்கோக்குடி யில் மகள்கொள்ளற்குரிய தகவுடைய குறுமன்னரான வேண்மாரை மணப்பர்; சிறுபான்மை பிறகுலத்து முடிமன்னர்தமையும் அவர்

* பிறங்கடைகள்—வாரிசுகள்.

வேட்டல்கூடும். இவர் யாரைமணந்தாலும், இப்பெண்கள் பெறும் ஆண்மக்கள் எல்லாரும் சேரருக்கு மருகராய்ச் சேரநாட்டில் வழி முறையே அரசுரிமைக்கு அருகராவர்.

(4) மாதுலச்சேரரோடு மருகச்சேரரைமட்டும் சுட்டி, அவர் தந்தையரைத் துலக்காவிட்டால், அவர்தாயரை மணந்தகணவரில்லாத மகளிராகக் கருதநேருமாதலால் அவ்விழிதகவை அற விலக்கி, "மக்கட்டாயமுடைய தமிழகம் மதிக்க மணந்து சிறந்த கற்புடைத் தாய்க்குடிப்பெருமையுடையர் பாட்டுடைத்தலைவ"ரென விளக்கும் பெற்றி வேண்டப்படுகிறது. அதனாலே அக் கோச்சேரர்குலம் விளக்கும் பதிகங்கள், ஒவ்வொன்றும் ஒவ்வொருகோச்சேரன் தாயையும் அவன் தந்தையொடுவிளக்கி, அவ்விருவர்பெற்றமகன் இனையன் எனத் துலக்கி, இன்ன பெருங்கோச்சேரற்கு இவன் மருமான் எனக் குறித்து, விவரமெல்லாம் விளக்கமுற விரிக்கின்றது. ஒவ்வொருபதிகமும் பாட்டுடைத்தலைவனின் இருமுதுகுரவரையும் விதந்துகூறி, அதன்பின் அவனை அவரீன்றமகனென ஒருபடியே தெரிநிலைமுறையிற் குறித்துப்போகின்றது. அன்றியும், அவன்முன் தோன்றலான கோச்சேரனை முதலிற்கூறி, பின் பெற்றோர்பெயர் கூறி, அச்சேரனுக்கு அப்பெற்றோர் ஈன்றுதவியமகன் எனப் பதிகந்தோறும் தவறாமற் கூறிப்போவதால், அப்பாட்டுடைத்தலைவன் கோச்சேரனுக்கு வழித்தோன்றலான மருகன் என்பதும் குறிப்பு வகையால் துலக்கப்படுகிறது.

(ii) பதிற்றுப்பத்துச்சேரரின் ஆட்சிமுறை.

இனி இப்பதிகங்கள்கூறுமரசர்வரிசையைச் சிறிதாராய்வோம். சேரசிம்மாதனத்தில் உதியஞ்சேரலுக்குப்பின் இமையவரம்பனும், அவனுக்குப்பிறகு அவன்தம்பி பல்யானைச்செல்கெழுகுட்டுவனும் முறையே ஏறினரெனவும், இவருள் இளையோனாகிய குட்டுவனும் ஆண்டு முடிந்தபின்னரே இவரிருவருக்கும் தொடர்புடைய பதுமன் தேவிமக்களிருவரான நார்முடிச்சேரலும், ஆடுகோட்பாட்டுச்சேரலாதனும், அவர்களுக்கிடையே சோழன் மணக்கிள்ளிதேவிமகன் செங்குட்டுவனும் முறையே அரசுகட்டிலேறி நாடாண்டனரெனவும் தெரிகிறது. மற்றொரு இளைச்சேரர்வழிமுறையில் அந்துவன்சேரல்முதல்

இளஞ்சேரலிரும்பொறை யீறாக நான்கரசர் வரன்முறையாய் ஆட்சி புரிந்தனரெனவும்விளங்குகிறது. இவற்றைக்கொண்டு இமையவரம்பனுக்குப் பதுமன்மகளும் சோழன்மகளும் மனைவியராய் மக்கள்மூவரைப் பெற்றுக்கொடுத்தனரெனவும், அம்மக்கள் தம் தந்தை சிறிய தந்தை இருவரும் ஆண்டபிறகு முறையே தாம் முடிபுனைந்து தனித் தனியே எல்லாரும் சேரநாட்டை ஆண்டனரெனவும், அதுவேபோல அந்துவஞ்சேரலுக்குக் கடுங்கோவும், அவனுக்குப் பெருஞ்சேரலிரும்பொறையும், அவனுக்கு இளஞ்சேரலிரும்பொறையும் வழிமுறையே மகன்மகனாய்க் கிளைச்சேரர் சிறுநாட்டை ஆண்டுவந்தனரெனவும் ஒருசிலர் கருதுகின்றனர்.

ஆனால், ஆழ்ந்து சூழ்ந்து நோக்குங்கால் உண்மை வேறாகத் தோன்றுகிறது. இமையவரம்பனும் அவன்தம்பியும் வேள்வெளியனுக்கு மக்கள். இவர் தம் மாமன் உதியஞ்சேரலுக்கு மருகராய், அவனுக்குப்பின் சேரநாட்டுரிமைபெற்று, ஒருவர்பின் ஒருவராய் ஆண்டனர். அவருக்குச் சோதரிமுறையினரான அவர்கோக்குடிப் பிறந்த பெண்டிருள் ஒருத்தி வேள்பதுமனையும் மற்றொருத்தி சோழனையுமாக மணந்து மக்களைப்பெற்றனர். அம்மக்கள் தம் தாயர்குடிச் சேரமன்னருக்கு வழிமுறையில் மருகராகையால், மாமன்மாரிருவரும் தத்தம் முறையில் ஆண்டு முடிந்தபின்னர் மருகருரிமையில் வரிசை முறையாய்த் தாமும் சேரசிங்காசனம் ஏறுகின்றனர். பதுமன்தேவி ஒருத்தியே—சேரர்பெருங்குடியில் இமையவரம்பனுக்குச் சகோதரியாயும்—கிளைச்சேரர்குடியிற் கடுங்கோவுக்குச் சோதரிமுறையுடையளாயும் நின்று, தான்பெற்ற மக்களுள் ஒருவனைத் தன்குடியில் மருகனில்லாத கடுங்கோவுக்கு மருகனாய் அவன் கிளைக்குடிதழையக் கொடுத்துதவியிருக்கலாம். அல்லது வேள்பதுமனுக்குக் கோக்குடி நெடுஞ்சேரலாதன்சோதரி ஒருமனைவியும், கிளைச்சேரர்குடிக் கடுங்கோவின்சோதரி ஒருமனைவியுமாயிருந்து அவரவர்தாய்க்குடியைத் தாங்க இவ்விருமனைவிமாரும் பதுமனுக்கு மக்களைப்பெற்றுமிருக்கலாம். எப்படியாயினும், இம்மக்கள் ஒவ்வொருவரையும் பதுமன் தேவிமக்கள் எனச் சுட்டுவது தவறாகாது. இவ்விருகுடியினும் இவ்வாறு மாமன்மார்க்கு மருகர்-வழித்தோன்றல்களாய்நின்று, வரன்முறையே நாடாண்டனர். இதுவே இப்பதிகத்தொடர்கள் தெரிவிக்

கும் செய்தியெனத் துணியக்கிடக்கிறது. இப்பதிற்றுப்பத்துச் சேரரின் ஆட்சிமுறையால் இத்துணிவை வலியுறுத்தி, இதற்கு மாறான மக்கட்டாயக்கொள்கையை நலிவிக்கும் நியாயங்கள் சில வற்றை இங்கு நிதானிப்போம். அவை வருமாறு:—

(1) மக்கட்டாயமுடையகோக்குடியில், மயின்முறையாய் முதல் மகனின் முதல்மகனே வழிமுறையே அரசுபெறற்குரிமைபூண்பான். கோலோச்சுங் கோவேந்தற்கு ஆண்மக்கள் பிறந்திருக்க, அவரை விலக்கி வேந்தனுடன்பிறந்தவர்கள் நாடாளுமுரிமை கொள்ளார். மருமக்கட்டாயக்குடியாமேல் உடன்பிறந்தாரனைவருமே வரிசைமுறையில் ஆண்டுமுடிந்தபிறகுதான், அடுத்த கீழ்ப்படியிற் சோதரிமார் மக்கள்-அநந்தரவராகிய மருகர்கள்-ஆட்சிபெறுவர்.

இம்முறையிற் பதிற்றுப்பத்திற் பாடப்பெற்றுள்ள சேரபரம்பரையைப் பரிசோதித்துப் பார்ப்போம். சேரரை மக்கட்டாயமுடையராய்க் கருதுபவர் எண்ணுகிறபடி 2-ஆம் பதிகத்தலைவனான இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு, பதுமன்மகள், மணக்கிள்ளி மகள் எனும் இருமனைவியரால்,—களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரல், சேங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் என மூவர்மக்கள் உளர். இருந்தும், இவர்களை விலக்கி இவர்தம் சிறிபதந்தையான பல்யானைச்செல்கெழுகுட்டுவன் முடிசூடி 25 ஆண்டு அரசுவீற்றிருக்கின்றான். அவனுக்குப்பிறகுதான் அவன் தமையன்மக்களான இம்மூவரும் நாடாட்சிபெறுகின்றனர். இது மக்கட்டாய அறமுறையில் நிகழொணாதது.

ஆனால், சேரர் மருமக்கட்டாயமுடையராகில், பதிற்றுப்பத்தில் நாம் காணும்முறைதான் அறமுறையாகும். இமையவரம்பனுக்குப் பின் அவன்தம்பியே தாய்வழித்தாயக்கிரம உரிமையில் அரசனாக வேண்டும். அவ்விருவர்களுக்கும் பிறகே, அவர்களின் மருகர்கள் தங்கள் வயதுக்கிரமவரிசைப்படி ஒவ்வொருவராய் முடிபுனைந்து நாடாள்வர். மேலேநாம்கண்டபடி, களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரல் ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் இவர்களின் தாய் சேரர்கோக்குடிப்

பிறப்புடையவள், பதுமனுக்கு மனைவி. ஆவிக்கோமான் பதுமன் எனும்வேளுக்குவாழ்க்கைப்பட்டு, அவனால் இவள்சேரர்கோக்குடிக்கு இருமக்களை ஈன்றுதவினள். அதுவேபோல் நற்சோணை என்பாளும் சேரர்குடிப்பிறந்து சோழனைமணந்து வாழ்ந்தவளாகும். அவளீன்ற மக்கள் செங்குட்டுவனும் இளங்கோவும் ஆவர். இளங்கோ துறவு பூண்டு அடிகளாகவே, அத் தாய்வழியிற் கோவுரிமைக்குடையவன் குட்டுவன்மட்டுமேயாகிநிற்பன். இவர்கள் தாய் நற்சோணையும் வேள்பதுமனின்மனைவியும் சேரர்குடியில் மணந்து புகுந்த பிறகுடிப் பெண்டிரில்லை, அக்குடியிற்பிறந்து சிறந்த பேரரசிமாராவர். அவர்கள் வயிற்றுதித்தமக்களான மூவரும் இமையவரம்பனுக்கும் அவன் தம்பி குட்டுவனுக்கும் பிறங்கடையரான மருகராவர். ஆகவே தங்கள் மாமன்மாரான அவ்விருவரும் ஆண்டுமுடிந்தபிறகு இம்மருகர் மூவரும் வழிமுறையில் தம் மரபுநியதிப்படி ஆட்சிபெறுகின்றனர். இது அறமும் அடிப்பட்ட குடிவழக்குமாய்ப் பொருத்தமும் சிறப்பும் பெற்று அமைகின்றது. இவர்களுக்குமுன் இமையவரம்பனுக்குப் பின் இவர்தம் இளையமாமனை செல்கெழுகுட்டுவன் நாடாளுவதில் வரிசைமுறைப்பிறழ்ச்சி யில்லை. இவர்தம் ஆட்சிமுறையில் தாய்க்குடித் தாயமுறையறமே பேணி ஓம்பப்படுகின்றது.

(2) மேலும், இம்மூவருக்கும் தாம்பெற்ற தநயர் இல்லையென்று யாண்டும் நுவலக்கப்படவில்லை. இவருட் செங்குட்டுவனுக்கு அவன் பெற்ற மகன் இருந்ததாக 5-ஆம் பதிகம் விதந்தும் கூறுகிறது. அவ்வாறு தநயர் உளராயின், மக்கட்டாயமுறைப்படி தந்தைக்குப் பிறகு உடனே உரியதநயரே முடிசூடவேண்டுவதன்றி, இவ்வாறு சோதரர்மூவரும் தம்முள் வரிசைமுறையில் ஒவ்வொருவராய் ஆட்சி பெறுவது அவசியமும் அறமும் இல்லை. தம் தநயரைவிலக்கி இம்மூவரும் முறையே ஆண்டதும், இவர்களை விலக்கி இவர்களுக்குமுன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் ஆண்டதும் இவர்குடியில் மருமக்கட்டாயம் உண்மையையும், அம்முறையில் இவர்களுக்கு உள்ள தாய்வழித்தாய உரிமையையும் நன்கு வலியுறுத்தும்.

(3) இன்னும், மக்கட்டாயமுறையிற் கடைசியில் ஆண்ட அரசரின் அடுத்த பிறங்கடை (வாரிசு) க்குத்தான் அடுத்த பட்டம்.

ஒருதாய்வயிற்றுமக்கள் மாற்றாந்தாய்வயிற்றுமக்களைவிட நெருங்கிய தொடர்புடையர்; அதனால் சிறந்த உரிமையும் அடைகின்றனர். அற நூல்விதியும் ஆட்சியும் நமதுநாட்டில் ஒருதந்தைமக்கள் பலருள்,ஒரு வருக்குச் சகஉதரரல்லாரை விலக்கி, அவருடன் ஒருவயிற்றுதித்தா ரையே அவருக்குச் சிறந்தபிறங்கடைகளாக்கிநிற்கும். எனவே, களங் காய்க் கண்ணிநார்முடிச்சேரலுக்கு ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் சகோதரன்; செங்குட்டுவன் மாற்றாந்தாய்மகன். இவர்களெல்லார்க் கும்தந்தை இமையவரம்பனாயின், அவனுக்குப்பின்அவன்மக்கள்மூவ ருள் மூத்தவனே சிறந்தபிறப்புரிமையுடன் பட்டமெய்துவன். அவ னுக்குப்பின் அம் மூத்தமகனுடைய வாரிசுக்குப் பட்டமிறங்குவதல் லது, அவ்வாரிசுகளை விலக்கி, முந்தியதந்தையின் வாரிசுகளுக்குப் போவது முறையில்லை செங்குட்டுவன் மூத்தவனாயிருந்தால், முத லில் அவனே முடிபுனைந்திருப்பான். அவனுக்குப்பின் அவன்தநயரும் அவனுக்கு ஒருவயிற்றுத்தம்பியருமே ஆட்சிபெறுவர். இவர்க்கு முன்னே அவன் மாற்றாந்தாய்மக்களுக்கு உரிமையில்லை. ஆனால், செங்குட்டுவனுக்குமுன் நார்முடிச்சேரல் ஆண்டிருப்பதாய் அறிகின் றோம். அதனால் அவனே வயதில் மூத்தவனாகப் பட்டமெய்தினன் என்று தெரிகிறது. அவனுக்குப்பின் அவன் தநயரும், தநயரில்லை யானால் அவனுக்கு ஒருவயிற்றுத்தம்பியான ஆடுகோட்பாட்டுச் சேர லாதனுமே அவன் அரசுபெறுதற்குச் சிறப்புரிமையுடையராவர். இவர்களைவிட்டு இடையே செங்குட்டுவன் ஆட்சிபெறுதற்கு அவசிய மும் நியாயமும் இல்லை.

ஆனால் மருமக்கட்டாயக்குடியில் இவர்கள் கோச்சேரருக்கு மருகராவர். ஆகவே வயதுக்கிரமப்படி இம்மூவரும் ஆட்சிபெற்றுத் தீரவேண்டும். மருகருள் ஒருவயிற்றுதித்ததால்மட்டும் யாருக்கும் எவ்விதச் சிறப்புரிமையும் ஏற்படாது. வயதுமுறைவரிசையில் மட்டு மே அவரவர் ஆட்சியுரிமை வரையறுக்கப்படும். ஆளும் அரசருக்கு மக்கள் இருந்தாலும் அம்மக்களுக்கு உரிமையில்லையாகவே, ஒருவர் பின்னொருவராய்ச் சோதரரும் சோதரருக்குப்பின் அவர்தம் மருகரு மே ஆட்சிபெறுவர். பதிற்றுப்பத்துப் பதிகங்களால் இவர்மூவரும் முறையே சேரநாட்டை ஆண்டதாயும், இவருள் ஒருவயிற் றுடன் பிறந்தார் இருவர்க்கிடையே ஒருவயிற்றுதியாத செங்குட்டுவன்ஆட்சி

பெற்றதாயும் அறிகின்றோம். இவையெல்லாம் மருமக்கட்டாயத் தொடு பொருந்துவனவன்றி, மக்கட்டாயமுறைக்கு ஒவ்வா. இவற்றானும் சேரர்குடியில் மக்கட்டாயம் வழங்கவில்லை என்பது உறுதி பெறுகிறது.

(iii) சேரமன்னரை யாண்டும் தந்தைக்குத் தநயரென்னாது, முன்னவற்கு மருகரெனவேகூறுமரபின் குறிக்கோள்.

இதை வலியுறுத்தும்செய்தி இன்னுமொன்று உளது. பதிற்றுப் பத்திலும் மற்றும் பண்டைச்சங்கநூல்கள் பலவற்றிலும் சேரரைக் குறிக்கும் பாட்டுக்கள் பல. அவற்றுள் ஒன்றிலேனும் ஒரு சேரனையாவது அவன்தந்தைக்கு மகன் என்று சுட்டுங்குறிப்பே இடையாது. அதற்குமாறாக முன்னரசரின் தொடர்புகுறிக்குமிடத்திலெல்லாம், பாட்டுடைச்சேரனை அம்முன்னோனின் "மருகன்" எனவே எல்லாப் பழம்புலவரும் யாண்டும் ஒருபடியே சுட்டிப் போகப் பார்க்கின்றோம். இது மிகவும் சிந்திக்கத்தக்கது.

"மருகன்" என்பது வழித்தோன்றல் என்ற பொருளுடைய சொல்லாகையாலும், அடுத்ததந்தையைச் சுட்டாமற் புகழ்சிறந்த மூதாதையரையே சுட்டித் தொடர்புகாட்டுவது புலவர்முறையாகையாலும், அம்முறையிற் பாட்டுடைத்தலைவரை அம்முன்னோருக்கு மருகரெனவே சுட்டிப்பாடுகின்றனரெனச் சிலர் சமாதானம் காட்டவரலாம். எனில், சேரகுலத்தில் புகழ்படைத்த ஒரு சேரலற்குப் புகழ்படைத்த பெருமக்கள் ஒருவருமே எஞ்ஞான்றும் பிறக்கவில்லையென்றுவது, அடுத்துப் பெரும்புகழ்கொண்ட இருதலைமுறைச் சேரவேந்தரைப் பாடப் புலவரில்லையென்றுவது கொள்ளுவது அசம்பாவிதம். பதிற்றுப்பத்துப் பதிகப்பாட்டுக்களை மக்கட்டாயமுறையிற் பொருள்கொள்ளுவோரே இமையவரம்பனுக்குப்பின் அவனையொத்துப் பாடல்பெறும் புகழ்படைத்த மூவர்மக்கள் இருந்தனரென்றும், அந்துவன்சேரல்முதல் இளஞ்சேரலிரும்பொறைவரை நாலுதலைமுறையாக ஒவ்வொருசேரனுக்கும் பாடப்பெறுஞ் சிறப்புடைய பெருமகனே பிறந்து புகழ்சிறந்துளனென்றும் கூறுகின்றனரே. இப்பெருமக்கள் பலருள் யாரேனும் ஒருவனைப்பாடிய புலவர்கூட அவனை அவன்பெருந்தந்தைக்கு மகனெனச் சுட்டிப் பாடாததற்குக்

காரணம் என்ன? ஒவ்வொரு பதிகத்தலைவனுடைய மனைவியின் தந்தையைக்கூடப் புலவர் தவறுமற் சுட்டிச் சிறப்பிப்பதாக இப் பதிகத்தொடர்களுக்குப் பொருள்கொள்ளுகிறவர்கள், அச் சேரருக்கு முன் பெரும்புகழ்படைத்துப் பல புலவராற் பாடப்பெற்ற அவர் தம் தந்தையரின்தொடர்பைமட்டும் எல்லாப்புலவரும் ஒருபடியாக மறைத்தொதுக்குவானேன்? மக்களைப்பாடும் புலவரெல்லாரும், அம் மக்களினும் புகழ்சிறந்த அவர்தம் தந்தையரை அற மறந்து ஒதுக்கி விட்டு, பெயர்சுட்டும்பெற்றிபெறுப் பெண்டிரையும், அப்பெண்டிர் பிதாக்களையும் தம் பாட்டுக்களில் மறவாமற் பாராட்டுவானேன்? போகட்டும். ஒருதலையாகப் பாடும் சேரரின் முன்னோரை மதியாமல் விட்டொழித்து, அச்சேரர்காதற்பெண்டிரோடு அப்பெண்டிர் தந்தையரைமட்டுமே பழம்புலவரெல்லாரும் பாராட்டினர் என்றுவது கொள்ளக்கிடந்தாலும் ஒருவாறு அமைதிபெறலாம். உண்மையிற் புலவர்பலரும் தம் பாட்டுடைத்தலைவரின் முன்னோரை விட்டபாடில்லை. அன்ன பெருமுன்னோரைச் சுட்டி, அவர்மருகரெனப் பாட்டுடைத்தலைவர்தமை விதந்து பாராட்டிப்போக நாம் பார்க்கின்றோம். பதிற்றுப்பத்திலேயே அத்தகைய குறிப்புக்கள் பல வருகின்றன. இதனை ஊன்றிச்சிந்திக்கும்போது மக்கட்டாயமுறை இக் கோச்சேரர்குடியில் இல்லாமையே இவ்வாறு சேரரெல்லாம் மருகரெனவே பாடப்பெறுதற்குக் காரணமென்று தெரிகிறது. இளஞ்சேரலிரும்பொறையைப் பெருஞ்சேரலிரும்பொறையின்மகனென்னுது, 'விறல்மாந்தரன் விறன்மருகன்' என்று பெருங்குன்றூர்கிழார் பாடத் தக்ககாரணம் இம்மருமக்கட்டாயமன்றிப் பிறிது காணல் அரிது.

## பகுதி ரு. மருகன் என்ற சொல்லின் பொருளாட்சிகள்.

ஊன்றிச்சிந்தித்தால், 'மருகன்' என்னும் சொல்லுக்கு "வழித்தோன்றல்" என்னும் பொருளே இம் மருமக்கட்டாயவழக்கால் வந்திருக்கவேண்டுமெனத் தோன்றுகிறது. மருகன் எனும் சொல், நேரே சோதரிமகனையும், மகள்மணவாளனையுமே குறிப்பது மரபு. அந் நேர்பொருளில் வழங்குவதோடமையாமல் அச்சொல் சிலபுலவர் செய்யுள்களில் மக்கட்டாயக்குடிகளில் வழித்தோன்றலாவாரைச்

சுட்டவும்வருகின்றது. மக்கட்டாயநாடுகளில் மருகர் மாமன்மார்க்கு என்றும் வழித்தோன்றலாகமாட்டார். மருமான்மார்க்குரிய பெயர்ச்சொல் அவ்வுறவுமுறைக் குரிமையின்றித் தம் தங்கைக்குத் தனயராய் வழித்தோன்றலாவாரைக் குறிக்கப்பெறுவானேன்? மக்கட்டாய முறையில் அச்சொல் அப்பொருளி லாட்சிபெறும் ஆற்றலும் ஆறும் இல்லை. மருமக்கட்டாயவழக்கம் தமிழகத்தில் உளதாயின் அம்முறையில் வழித்தோன்றலாவார் மருகரேயாகையால், நாளடைவில் "மருகன்" எனும் சொல், மருமான்—எனும் முறைசுட்டும் தன் நேர்பொருளைமட்டுமன்றி, வழித்தோன்றல் எனும் சார்புப்பொருளையும் வழக்காற்றாற் பெறுவது இயல்பாகும். பிறகு இருதாயக்குடிகளிலும் தாயமுறையைக்குறியாமலே பிறங்கடை(வாரிசு) ஆவார் எவரையும் வழித்தோன்றல் எனச் சுட்டும் பொதுச்சொல்லாகி வழங்கப்பெறும். இதுவே இச்சொல்லுக்கு இப்பொருள் கிடைத்த வரலாறாகவேண்டும். என்றும் யாண்டும் மருமக்கட்டாயமறியாத மக்கட்டாயம் மட்டுமே வழங்கும் ஒருநாட்டில் மருகர் என்றுமே வழித்தோன்றலாகாராகையால், அவர்பெயர் அப்பொருளெய்தநியதியில்லை; வழியுமில்லை. ஆகவே, தமிழில் இப்பொருளில் இச்சொல் வழங்கி வருவதாலும், தமிழகத்திற் சேரநாடல்லாத பிறிதுபுலமெல்லாம் மக்கட்டாயமே தொன்றுதொட்டு நிலைபெற்றும் நூல்குறிக்கும் காலமெல்லாம் கையாளப்பெறுவதாலும், இச்சொல்லுக்கு இப்பொருளாட்சி குடபுலச்சேரர் குடித்தாயமுறைகொண்டே கிடைத்திருக்கவேண்டுமென்பது தெளிவுபெறுகிறது. எனவே, பழம்பாட்டுக்களிற் சேரரையெல்லாம் மருகர் எனவே குறித்துப்போகும் வழக்காற்றால் அச்சொல்லின் பிந்தியபொருள்கொண்டு அவரை மக்கட்டாயமுறையில் வழித்தோன்றல்கள் எனக்கொள்ளுவதைவிட, அவர்களின் மருமக்கட்டாயமுறையையே அது சுட்டுமெனவும், அவர்தம் தாயமுறை வழக்குப்பற்றியே நாளடைவில் அச்சொல் வழித்தோன்றல் எனும் பொதுப்பொருள்பெற்று மக்கட்டாயமுறையில் வழித்தோன்றலாவாரையும் குறிக்கலாயிற்றெனவும் கொள்ளுவதே பொருத்தமாகும்.

## பகுதி ௬.

## பதிற்றுப்பத்துப் பாட்டுக்களிலெல்லாம் மருகரென்றே சுட்டவும் பதிகங்களில்மட்டும் 'மகன்' என்றுவந்த பிரயோகத்தின் பொருட்பொருத்தம்.

இனி, இங்கு நாம் பொதுவாக விசாரித்தறியவேண்டிய செய்தி பிறிதொன்று உண்டு. பதிற்றுப்பத்துப் பதிக ஆசிரியர் பாட்டுடைத் தலைவனைப் பதிகத்திற்குறித்த வேறு சேரவேந்தனுக்கு மேலேகூறிய படி 'மருகன்' என்னுமல் வாளா மகனென்றே கூறிவைத்திருக்கின்றார். ஆகவே இங்கு 'மகன்' எனும் சொற்பொருளை நாம் சிறிது விசாரிப்பது பொருத்தமாகும். பதிற்றுப்பத்துநூலிலும் மற்றச் சங்கச்செய்யுட்களிலும் நிரந்தரமாகப் புலவரெல்லாம் தாம் பாடும் சேரரை அவர்தம் முன்னோருக்கு மருகர் என்றே குறித்துப்போவதற்கு மாறாக, இப்பதிகப்பாட்டுக்களிலெல்லாம் ஒருபடியாக ஒவ்வொரு பாட்டுடைச்சேரனையும் மற்றொரு பெயர்குறித்த சேரமன்னனுக்கு 'மருகன்' என்னுது வாளா 'மகன்' எனவே கூறிவைத்திருப்பது சிந்திக்கத்தக்கது. ஒருசேரனுக்கு மற்றொருவன் மகன் என்று மட்டும் கூறப்பட்டாலுங்கூட, அதுகொண்டு பின்னவன் முன்னவனுக்கு அவன்பெற்ற புதல்வன் என்று ஒருதலையாகத் துணிய இயலாது. அப்படியிருக்க, இங்குப் பதிகங்களெல்லாம் வாளா இரு சேரரைமட்டும் சுட்டி, அவருள் ஒருவனை மற்றவனுக்கு மகன் எனப் பேசவும் இல்லை. ஒவ்வொரு பதிகத்திலும் 'மகன்' எனும் சொல், தனியே இருசேரர்பெயர்க்கிடையில் முறைப்பெயராய் நில்லாமல், இடையே பிறசொற்றொடராக்கம் பெற்றே வருகின்றது. ஆகவே இங்கு இதன்பொருளைச் சிறிது ஊன்றிவிசாரிப்பது அவசியமாகிறது.

'மகன்' என்ற சொல் தமிழில் (1) ஆடவன், (2) மணவாளன், (3) பெற்றபுதல்வன், (4) பெறாத வழித்தோன்றல் அல்லது வாரிசு எனப் பலபொருளிலும் வருவதாகும். ஆகவே இச்சொல்லுக்கு ஆங்காங்கே இடம்நோக்கிப் பொருள் இன்னதென்று வகுத்துக் கொள்ளவேண்டுவது இன்றியமையாத கடமையாகும். பதிகங்களிலெல்லாம் இச்சொல் எங்கும் நிரக்க 'ஈன்ற' என்னும் அடையடுத்தே நிற்பதால் இதற்குக் கேவலம் 'ஆடவன்' அல்லது 'மணமகன்' என்ற

பொருள்கள் விலக்கப்படும். பெற்றோர்பெயர்குறித்து, இன்னார் "மனைவியீன்றமகன்" என்று விதந்துகூறப்படுவதால், அப்பெற்றோருக்குப் பாட்டுடைத்தலைவன் அவர் "பெற்றபுதல்வனே" என்று தெளியப்படும்.

அதனாலேயே பதிகமுதலிற் பெயர்குறிக்கப்பெற்ற "சேரனுக்கு அவன் புதல்வன் ஆகான்" என்பதும் தெளியப்படும். எனினும், அச்சேரனுக்கும் பாட்டுடைத்தலைவனுக்கும் உள்ள தொடர்பைக் குறிக்கும் வேறு முறைச்சொற்கள் எதுவும் அங்கு இல்லாததால், அத்தொடர்பையும் இம் மகற்சொல்லே குறிப்பதாகக் கொள்ள வேண்டும். கொண்டால், அக்குறிப்பில் இச்சொல்லுக்குப் பெற்ற புதல்வனல்லாத வழித்தோன்றல் என்ற பொருளே அமைவதாகும். ஏனெனில், இங்கு ஒவ்வொருபதிகத்தலைவனையும் புலவர் பதிகப்பாட்டில் அவனைப் பெற்றோரிருவரொடும் விதந்துசுட்டி, அவன் அவருள் இன்னோன்தேவி யீன்ற மகன் என விளக்குவதோடு, பதிகமுதலிற் பெயர்குறித்த மற்றொருசேரனுக்கும் அவன் "வழிமுறைமகனுவான்" என்றும் தெளிவிக்கின்றார்-என்பது விசதமாகிறது. ஆகவே, இங்குப் பதிகங்களில்வரும் 'மகன்' எனும் சொல்—"பதிகத்தலைவனைப்" பெற்றோரின் தொடர்புகுறிக்கும்போது அவருக்கு அவன் புதல்வன் முறைப்பொருளிலும், மற்றொருசேரமன்னனின் தொடர்புகுறிக்கும் போது 'வழித்தோன்றல்' என்ற தகவுப்பொருளிலும்,—ஆட்சிபெறுகின்றதென்று தெளிவாகிறது.

இதைத் தெளிவிப்பதற்காகவே ஆசிரியர்-பாட்டுச்சேரனைப் பெற்ற இருமுதுகுரவரைக்குறிக்குஞ் சொற்றொடரை அவனைச்சுட்டும் 'மகன்' என்றசொல்லுக்கு அண்மையில் வைத்ததோடமையாமல், அடுத்து அச்சொல்லுடன் 'ஈன்ற' என்ற அடைதொடுத்துநிறுத்தியும்-அவனைத் தனக்குப் புதல்வனுகாமல் வழித்தோன்றலாகமட்டும் பெறும் மற்றொரு சேரமன்னன்பெயரைக் குவ்வுருபுகொடுத்துப் பிரித்துச் சேய்மையில்நிறுத்தியும்-வைத்திருக்கும் அழகு கவனித்துப் பாராட்டத்தக்கது இங்கு நான்கனுருபு 'கொடை' 'பொருட்டு' 'முறை'ப்பொருள்களில் வந்துள்ளது. பதிகமுதலிற்குறித்த ஒருசேரனுக்கு, அவன்மரபுதழையும்பொருட்டு, அவன்குடி சிறக்க மகப்

பெற்று ஈயும் உரிமையுடைய கோமாள்ஒருத்தி விதந்து கூறப்பட்ட வேறொரு தக்ககணவனை மணந்து அவன்மனைவியாவாள், தனக்கு மக னாய்த் தான்பிறந்த சேரர்குடிதழைய அச்சேரனுக்கு முறைக்கு மக னாய் (வாரிசாய்) ஈன்றுகொடுத்தவனே பாட்டுடைச்சேரன் என்பது பதிகத்தொடரமைப்பால் இனிது போதருகின்றது. பதிகமுதலிற் குறிக்கும் சேரன்பெயர்க்கு நான்காம்வேற்றுமையுருபுபுணர்த்திப் பிரித்து அதைச் சேய்மையில் நிறுத்தியதனால், அப்பெயருடையா னுக்குப் பின் "ஈன்றமகன்" என்றுவரும் தொடர்குறிக்கும் பாட் டுடைத்தலைவன் நேரே பெற்றமகனாகாவிட்டாலும் அச்சேரன்குடி சிறக்கும்பொருட்டு அவனுக்கு மகன் (வாரிசு) முறையாக அவன் குடிப்பிறந்தாளொரு கோமாட்டி பெற்றுக்கொடுத்த (மகன்) வழித் தோன்றலாவான் என்று இப்பதிகத்தொடர் பொருள்பயத்தலால், இங்குப்'பொருட்டு' 'முறை'ப் பொருள்களையும் 'கொடை'ப்பொருளை யும் முறையே "கு"வ்வுருபு கொடுப்பதாகும். பெற்றோர்பெயர்களை அண்மையிற் குறிப்பதால் அவர்களுக்குப் பாட்டுடைத்தலைவன் நேரே யீன்றமகனுவதைப்பொருந்தக்கூறவேண்டுவதன்பொருட்டும், சேய்மையிற் சுட்டிய சேரனுக்கு அவன் வழித்தோன்றலாவதைக் குறிக்கும்பொருட்டும், இரண்டுக்கும் உதவவொண்ணாத 'மருகன்' என்பதைவிலக்கி, ஒருங்கே இருபொருளினும் செவ்வனே நின் றமைவதான 'மகன்' என்றசொல்லையே இங்கு இப்பதிகங்களிற் புலவர் ஓர்ந்துஉபயோகித்துள்ளார் என்பது பதிகத்தொடரமைப்பால் இனிது தெளியக்கிடக்கின்றது.

## பகுதி எ. முடிவுரை.

தமிழ்நாட்டில் குடமலைத்தொடருக்குமேற்கே குடபுலத்தில் மட்டுமே இம்மருமக்கட்டாயம் நெடுவழக்காய் நின்றுவருகின்ற தென்று இவ்வாராய்ச்சியால் தெளியக்கிடைக்கிறது. எனினும், அம் மலைத்தொடருக்குக் கிழக்கே தமிழகம் முழுவதும் சங்ககாலந் தொட்டு மக்கட்டாயமே நிலைத்துநிற்கின்றது. இக் கீழ்புலத்தில் என்றும் யாண்டும் யாராலும் மருமக்கட்டாயம் ஆட்சிபெற்றதான குறிப்பே நூல்களிற் கிடையாது. இந்நிலையில் இம் மருமக்கட்

டாயம் தொல்லைத் தமிழ்மரபா? பழமரபாமேல், தமிழகத்திற் கேரள மொழிந்த பிற பகுதிகளிலெல்லாம் இது வழக்கிழந்ததுமட்டுமன்றி, பழஞ்சேரருக்கு மக்கட்டாயமே மரபாமெனத் தமிழர் மயங்கும்படி இது மறக்கப்படவும் காரணமென்ன? தமிழமரபன்றேல், சேரர் எக்காலத்தில் யாண்டிருந்து எப்படி இதனை மேற்கொள்ளலாயினர்? சேரரே தமிழர்தானா? அன்றி 'வடவாரியரை வணக்கியது' போலவே, 'தமிழப்படையையெல்லாம் இடையறப்படுத்தி'த், தருக்கினர் என்று இவர் கீர்த்திகொள்வதால், இச்சேரர் தமிழரல்லாத அந்நியரா?

இவ்விடத்தில் நாம் கருதவேண்டியன இன்னும் சிலவுள. தமிழகத்தில் மேல்புலத்துமட்டுமே இத் தாய்வழித்தாயமுறை நடக்கின்றது. அங்கே, நாயர் முதலிய திராவிடசமுதாயத்தார்மட்டுமில்லை; தம்மை நல்ல அசல் ஆரியப்பிராமணராகப் பாராட்டித் தருக்கும் நம்பூரிமாரும், புறமதத்தராய்ப் பிறநாட்டிலிருந்துவந்து குடியேறிய மாப்பிள்ளைமாருமே மருமக்கட்டாயிகளாயிருக்கின்றனர். சமீபகாலத்தில் கிழக்குத்தமிழ்நாடுகளிலிருந்து வந்தேறிய சிலரொழிய, நெடுங்காலமாகக் குடமலைக்கு மேற்கிலுள்ள சேரநாட்டார் எல்லாரும் தொன்றுதொட்டு மருமக்கட்டாயத்தையே கையாண்டுவருகின்றனர்.

இவ்வாறு மேல்புலத்தில்மட்டும் தாய்வழியும் பிறிதெங்கும் தந்தைவழியுமாயிருப்பதன் சரிதமூலச்செய்திகளைத் தேர்ந்துதெளிதல் தமிழர்கடனாகுமன்றோ? மிகப்பழங்காலத்தில் தமிழகமுழுவதும் தாய்வழிமரபே பரவியிருந்து, பிறகு மக்கட்டாய ஆரியர் வந்தேறியபின் கிழக்குத்தமிழ்நாடுகளில் தாய்வழிநெகிழ்ந்தொழிந்து தந்தைவழித்தாயம் மேற்கொள்ளப்பட்டிருக்கலாம். எனினும், இத்தாய மாற்றம் குடமலைத்தொடர்கடந்து மேலைப்புலச் சேரரையிணக்க மாட்டாமல் கேரளத்தில்மட்டும் பழைய தாய்வழிதங்கியதெனலாம்.

கேரளத்தில் மாப்பிள்ளைமார் என்பார் ஆதியில் அராபிநாட்டினரென்பது எல்லாருக்கும் ஒப்பமுடிவதொன்றே. சமயத்தாலுமிவர் மகம்மதியர். மகம்மதியர் சமுதாய வழக்கவனுஷ்டானங்களை எளிதில் மாற்ற இணங்காத பிடிவாதிகளென்பதும், தங்கள் அனுஷ்டானங்களுக்காகத் தமதுயிரைப் பொருட்படுத்தாது கொடுத்தேனும் தம்

மொழுக்கவழக்கங்களைப் பேணுபவரென்பதும் உலகறிந்த செய்தி. இப்படியிருக்க, இவ்வரபிய மாப்பிள்ளைமார் குடநாடுபுகுந்தபின், அங்கே பரசுராமர் சாபத்துக்குப் பயந்து, தம் பழைய குலவொழுக்கங் குன்றப் பல புதிய அனாரிய ஆசார அநுஷ்டானங்களோடு மருமக்கட்டாயத்தையும் மேற்கொண்டுள்ள ஹிந்துக்களின் தூண்டுதலால், தாங்களும் மருமக்கட்டாயிகளாகிவிட்டார்களா? அல்லது இவர்கள் பூர்விக அரபியாவில் கையாளப்பட்ட பண்டை மருமக்கட்டாயத்தைப் புதியமகம்மதியர் அந்நாட்டில் மாற்றினபோது அதனைத் தாம் கைவிடச்சம்மதியாமல் அரபியாவைவிட்டுக் குடநாடுபுகுந்து, தம் பழந் தாயமுறையை விடாது பேணிவருகின்றனரா? அரபி தேசத்தில் ஆதிகாலத்தில் மருமக்கட்டாயமே இருந்ததென்பது நல்ல ஆராய்ச்சியாளர் ஆய்ந்து துணிந்தசெய்தி. *அரபிநாட்டுக்கும் குடபுலத்துக்கும் தொன்றுதொட்டு நெருங்கிய தொடர்புண்மையும் சரிதமறிந்த செய்தியேயாகும்.

இந்நிலையில், அரபியர் மகம்மதியராகிப் பலபுதிய ஆசாரத்திருத்தங்களை ஏற்படுத்தியமைவதற்கு வெகுகாலத்துக்குமுன்னரே, சில மருமக்கட்டாய அரபியர் குடபுலத்திற்குடியேறினவர் நாளடைவில் ஹிந்துக்களாயினர்:—அவரோடு பின்னர் மகம்மதிய மருமக்கட்டாயிகளான அரபிமாப்பிள்ளைமாரும் சமயமாறினும் தங்கள் பழவழக்கங்களைக் கைவிடமனமில்லாதவராய், அப் பழவழக்குக்கட் கிடமற்ற தமது நாட்டைவிட்டுச் சேரநாட்டில் வந்தேறி, தங்குலத்தவர் பல நூற்றுண்டுகளுக்குமுன்னரே ஆண்டுப்போந்து தமது நாட்டுத்தாய்வழித்தாயமுறையைவிடாது பேணிவரும் குடபுலக்குடிகளோடு ஒருங்கு வாழலாயினரென்று கொள்ளலாமா?

இத்தாய்வழித்தாயத்தார் ஆதிக்கம் வளர்ந்தவிடத்தில், தெற்கே நாஞ்சில்நாட்டுத் தமிழரைப்போலப் பிறமக்கட்டாயிகள் சிலரும் நாளடைவில் கால இட மாறுதலால் தாய்வழிமுறையைத் தாமும் கையாளத்தொடங்கியிருக்கலாம். அதற்குச் சமாதானங்கூறுமுகத்

* W. ராபர்ட்ஸன் ஸ்மித் என்பவர் எழுதிய "பழைய அராபியாவில் உறவுமுறையும் மணவியலும்" என்ற புத்தகம் பார்க்க. (Kingship & marriage in Early Arabia by W. Robertson Smith.)

தால், வடநாட்டில் தாந்தாயைக்கொன்ற டன்ஞூலிக்கு முணர்வுதூண் டப் பரசுராமர் தென்மேற்கே கோணத்தில் தாய்வழிவருத்துத் தாய் மார்க்குச் சிறப்புநிலை யிருத்தவும் புதுமுறைகள் படைத்துத் தம் பழையபழி துடைத்ததுபோலோர் அற்புதக்கதையினைக் கற்பித்து மிருக்கலாம்.

இன்னும், வடகங்கை வளநாட்டில் மூன்றாழிகட்குமுன்னிருந்த அசல் ஆரியப்பார்ப்பனப் பரசுராமரைப் பலகாடும் நெடுமலையும் கடத்தியிழுத்துக் குடநாட்டிற் புகுத்தியதோடு, அவரை ஆரிய ஆசாரங்களை அறவொழிக்குங்குலக்கோடரியாகவும் பழிசுமத்தும்பொருத் தாப் பொய்க்கதைகளைப்புறக்கணித்து, அராபிநாட்டுத்தொடர்புகுறிக் கும் பலசரித சூசனைகளை ஆராய்வது பலன்தராதா? வெள்ளையானை மீது கைலாயஞ்சென்றதாக நம்மவர் பாராட்டிப்புகழும் சேரமான், வெண்ணுரையெழுவி யலைமலைதழுவும் தண்கடல்மார்புதவழுங் கப்ப லேறி அராபிநாடுபுகுந்தவராக அந்நாட்டில்வழங்கும் வரலாற்றின் உண்மையை விசாரிப்பது மெய்ச்சரிதப் பழஞ்செய்தி யறியவிரும்பு வோர்க்குக் கடமையன்றோ? இனைய பலகேள்விகளும் எழுப வெல்லாம் நடுநிலையி னுண்மைகாணும்நோக்கமொடு ஆராயத் தக்கனவேயாம்.

ஆனால் இவையெல்லாம் எடுத்துக்கொண்ட இந்த ஆராய்ச்சிக்கு அவசியமல்லாதனவாகையால், அவற்றைப் பிந்தித் தக்கசமயம் கிடைத்துழிச் சாவகாசமாக விசாரிக்க விடையேற்பேம்.

தற்போது தமிழகத்தே மேல்புலத்தில் வழங்கிவரும் மருமக் கட்டாயமுறை புதிதொன்றில்லையென்பதும், தொல்லைச் சங்ககாலப் பழஞ்சேரர்குடிகளிலும் அடிப்பட்ட தொன்மரபாய் ஆட்சிபெற்றுத் தொன்றுதொட்டே வழங்கிவருவதாய்த் தெரிகிறது என்பதுமே, இவ்வாராய்ச்சியால் நாம் காணக்கிடைக்கும் பொருளாகும்.

